உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீல ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.


**சிறப்பாசிரியர் ,**

பேராசிரியர்

திரு. அ. ச. ஞானசம்பந்தன், M. A., சென்னை-83

**ஆசிரியர் குழு:-**

திரு. கம்பன் அடிப்பொடி, காரைக்குடி

திரு. மு. அருணுசலம், M. A., திருச்சிற்றம்பலம்

திரு. கா. ம. வேங்கடராமையா, M. A., அண்ணுமலைநகர்

மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர், மதுரை

மகாவித்துவான்

திரு. சி. அருணைவடிவேல் முதலியார், அண்ணுமலைநகர்

திரு. க. வச்சிரவேல் முதலியார், B. A., L. T., மதுரை

புலவர் திரு. கீரன், லால்குடி

டாக்டர் திரு. டி. பி. சித்தலிங்கையா, M. A. Ph.D., மதுரை

திரு. கு. சுந்தரமூர்த்தி, M. A., திருப்பனந்தாள்

திரு. பொ. முத்தரசு M. A., ஸ்ரீவைகுண்டம்

**நிர்வாக ஆசிரியர்:-**

டாக்டர் ம. வே. பசுபதி, D. Litt., திருப்பனந்தாள்


அட்டையில் :

ஸ்ரீ மெய்கண்டதேவர்

திருவுருவம்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 4] ஐப்பசி [பகுதி 1

## நான்கு

நான்கு என்பது சைவப் பயிர் தழைக்க உதவும் அதிர்ஷ்ட எண் ஆகும். சமயாசாரியரும் நால்வர்; சந்தானசாரியரும் நால்வர். ஸ்ரீகுமரகுருபரர் சமய இலக்கியத் திங்கள்இதழ் நான்காம் ஆண்டை எட்டியிருக்கிறது. இந்த இதழின் வளர்ச்சியும், இந்த ஆண்டு பிர மிக்கதக்கதாக அமையவேண்டும். சந்தாக்கள்பெருகுவதிலேஇதழின் வளர்ச்சி வேகம் இருக்கிறது வாசக அன்பர்கள் சந்தாக்கள் அனுப்பியும்பலரையும்சந்தாக்கள் அனுப்பச் செய்தும் இதழ் வளர்ச் சிக்கு ஒத்துழைப்புத்தர வேண்டு கிறேன்.

சாஸ்திரக் கருத்துக்கள் கவிதை வடிவில் அதுவும் இலக்கணச் சொற்களால் பின்னப்பட்டுவரும் போது புரிந்துகொள்ளச் சற்றுக் கடினமாகத்தான் இருக்கும். அப் படி ஓரிடம் பண்டார மும்மணிக் கோவையில் வருகிறது. அதை மிக எளிமையாக்கி அருள்பழுத்த கனிச்சுவையாக ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் வழங்கி யுள்ளார்கள். ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளுக்கு இவ்வுலக வாழ் வில் விருப்பு இருந்ததாம். அது எப்படி? அது சரியா? இனிப்பான விடை, கனிச்சுவையில் இருக் கிறது.

விடையரங்கம் பகுதியில், நாவர் கட்கும் இறைவன் அருள் புரிந்த முறைகள் பற்றிய ஒரு வினா. அதற்கு இருவரின் ருசிகரமான விடைகள் உள்ளன. எதிர்வாதர்க் காரர்களின்வினுக்களைச்சந்திப்பது இந்த நூற்றாண்டின் மிகஅவசியக் கடமைளில் ஒன்று. எனவே இந்தப்பகுதிக்கு நிறையவினுக்கள் அனுப்புங்கள். அறிஞர் பெரு மக்களின் விடைகளைப் பெற்று வெளியிடப் பெறும்.

பெரிய புராணம் முழுமையும், நாடக வடிவில் பார்க்கவேண்டும் என்று ஒரு ஆசை. நாடகம் என்று வந்தால் சற்றுக் கற்பனை கலக்கத் தான் செய்யும். 'திருவழக்கு' என்ற நாடகம்தொடங்கியுள்ளது 39 ஆம் பக்கத்தில் தொடர்ந்து வரும். எழுதுபவர் 'ஞானம்'.

திருப்புனவாயில் பற்றிய திரு. த. குருசாமிதேசிகர் அவர்களின் தலயாத்திரைக் கட்டுரையும் சைவ சித்தாந்தம் பற்றிய திரு. எஸ். இராமலிங்கம் அவர்களின் கட்டுரையும் சிந்தனைக்கு விருந்து படைக்கின்றன.

இளம் எழுத்தாளர் புலவர் திரு. இராசரத்தினம் எம். ஏ., அவர்கள் 'சித்தியார் காட்டும்

சக்தி நெறி' என்ற தலைப்பில் பல புதிர்களுக்கு விளக்கம் காட்டியுள்ளார்.

திரு. வன்மீகநாதன் அவர்கள் வழங்கும் லவட்ஸுவின் அறவுரைகளும், திரு. கா. ம. வே. அவர்கள் தரும் மொழிபெயர்ப்பும், திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் வழங்கும் நெஞ்சுவிடுதூது விளக்கமும், திரு. கண்ணபிரானின் மருந்து சிறுகதையும், டாக்டர் திரு. சடையப்பன் அவர்களின் மருத்துவக் குறிப்புகளும் மற்றும் வழக்கமான அம்சங்களும் இதழுக்கு அணி செய்கின்றன.

நி. ஆ-ர்



உ

சிவ சிவ

## 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீல ஸ்ரீ காசிவாசி

முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அருளாணையின் வண்ணம் வெளிவரும்

சமய இலக்கியத் திங்கள் இதழ்

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | (உள்நாடு) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | (உள்நாடு) | ரூ. | 7—50 |
| | (ஸ்ரீலங்கா) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின் பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள் பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணியவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி**
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

'உங்களுக்கு எந்தவூர் பிடிக்கும்' என்று உங்கள் நண்பர்களை யெல்லாரையும் கேட்டுப் பாருங்கள். ஆளுக்கு ஒரு ஊரைச் சொல்லுவார்கள்; அதற்கும் காரணம் சொல்லுவார்கள். எல்லாவற்றையும் சிந்தித்துப் பாருங்கள். அனைத்திலும் மையமாக ஒரு கருத்து இருக்கும். அது 'மன அமைதி' பொருளீட்டும் வாய்ப்பை மட்டும் மையமாக வைத்தோ, பொழுது போக்கு அம்சங்களை மட்டும் மையமாக வைத்தோ நாம் ஓரிடத்தை விரும்புவது கிடையாது.

ஞானிகளுக்கு இப்படிப்பட்ட விருப்புக்கள் வருவதில்லை. ஞானாசிரியனிடத்தில் அடியவர்களாக இருப்பவர்களும் இத்தகைய விருப்பங்களுக்கு ஆட்படுவதில்லை. அவர்கள் உலகத்திலேயே விருப்புக் கொள்வதில்லையே.

சாமான்யர்களுக்கும் இந்த அடியவர்களுக்கும் இன்னுமொரு பெரிய வித்யாசமும் இருக்கிறது. சாமான்யர்களுக்கு எந்தெந்தப் பொருள்களில் — காரியத்தில் விருப்பு

இல்லையோ - அவற்றிலெல்லாம் வெறுப்பு இருக்கும். ஞானி களுக்கு - அடியார்களுக்கு விருப்பு இல்லாத பொருள்களில்- காரியங்களில் வெறுப்பும் வருவதில்லை. இது ஒரு ஆச்சரியப் படத்தகுந்த மனோபாவம் ஆகும்.

'நிற்புகழ்ந் திறைஞ்சும் கற்பின் மாக்கள்
விருப்பு வெறுப்புஅற்று இருப்பர் என்ப
பொருள்துணிபு உணர்ந்த புலமை யோரே'

"ஞானாசிரியராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகரே! தங்களைப் புகழ்ந்து வழிபாடு செய்யும் அடியவர்கள் உலகத் தில், பொருள்களில், காரியங்களில் - விருப்போ வெறுப்போ கொள்வதில்லை என்று சமய நெறியை ஆய்ந்து உணர்ந்த புலமையோர் சொல்கிறார்கள்"

இப்படிச் சொல்வதைக் கேட்டாலே இதை இவர் மறுக்கப் போகிறார் என்பது நமக்குப் புரிகிறது. அது ஒரு பக்கம் இருக்க, அடியவர்களைக் 'கற்பின் மாக்கள்' என்று சொல்வதைச் சற்றுச் சிந்திக்க வேண்டும். கற்பின் மாக்கள் என்பதற்குக் 'கற்பிக்கப் பெறுவது கல்வி; எனவே கல்வி யாளர்கள் அடியவர்கள்' என்று பொருள் சொல்வதுண்டு. சொற்பொருள் என்று வரும்போது அது சரிதான். பிரயோ கப்படி 'ஒரு நெறிபற்றி - ஒன்றனை மட்டுமேபற்றி ஒழுகுவது கற்பு' எனப்படும்.

மனக்கிலேசத்தினால், இதனால் பலன்வருமா அதனால் பலன்வருமா என்று பலநெறிகளிலும் உழல்வது, கற்பாகாது. 'கொள்ளேன் பிற தெய்வம் நின்னை யன்றி' என்ற வைராக் கியம் இறைநெறியில் கற்பாகும். ஸ்ரீமாசிலாமணி தேசிகரின் அடியவர்கள் கற்புடையவர்கள். அவர்கள், கடவுளே ஞானா சிரியராக அவதரித்து வந்தமையை உணர்ந்து அவரையன்றி வேறு யாரையும் மனத்திற் கொள்ளாதவர்கள். எனவே அவர்கள் இறைநெறிக் கற்புடையவர்கள் ஆகிறார்கள்.

தம் ஞானசிரியராகிய ஸ்ரீமாசிலாமணி தேசிகரிடத்தில் இன்னொரு செய்தியை நகைச் சுவையாக ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் விண்ணப்பித்துக் கொள்கிறார்கள்.

" ஸ்ரீ சுவாமிகளே ! உங்கள் அடியவர்கள் விருப்பு வெறுப்பு அற்றவர்கள்; உங்களையன்றிப் பிறரை ஞானசிரியராக மனங்கொள்ளாக் கற்புடையவர்கள் என்றெல்லாம் சமய இயலை, வரலாற்றை ஆய்ந்தவர்கள் சொல்கிறார்கள். இதை நான் முற்றிலுமாக ஏற்றுக்கொள்ள முடியாது! "

' ஏன்? '

" ஞான மார்க்கத்தில் நீங்கள் விருப்பு வெறுப்பற்ற நிலையைத்தானே ஏற்படுத்துகிறீர்கள்? "

' ஆமாம் '

' அந்தப்பாடம் உங்கள் அடியவர்களிடத்தில் சரியாகப் படியவில்லை'.

' எப்படி? '

' இகத்தில் வெறுப்பும், பரத்தில் விருப்பும் இருக்கலாமா? '

' இருக்கலாம் '

' விருப்பு வெறுப்பு அற்றவர் என்பதற்கு இதுவே விரோதமாயிற்றே "

' என்றாலும் இது பரவாயில்லை '

' சுவாமி! உங்கள் அடியவர்களாகிய நாங்கள்—எளியேனையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்—இவ்வுலக வாழ்வில் விருப்பமும், பர வாழ்வில் வெறுப்பும் கொண்டிருக்கிறோம் '.

‘ ஓ! இதென்ன விபரீதம் ’

‘ சுவாமி! தாங்கள் ஞானசிரியராக அவதரித்திருக்கும் இகத்தில் விருப்புக் கொள்வது எங்கள் கற்பு. இது தவறில்லை ’.

— இக்கருத்துக்களை உட்கொண்ட பண்டார மும்மணிக் கோவைப் பாடலடிகளைப் பாருங்கள்:-

இகபரம் இரண்டும் எதிர்நிறை கொளினும்
தொகுதியுள் வேற்றுமைத் தொகைப்பொருள் கொளினும்
முன்னவர் மொழித்ததற்கு அன்னியம் ஆகலின்
விருப்பு வெறுப்புஉள ஆய
கருத்தினர் ஆகவும் கண்டனம் யாமே

[இகம் - இவ்வுலக வாழ்வு; பரம் - மறுமை வாழ்வு; எதிர்நிறை - ஓர் அணி; தொகுதி - சேர்க்கை; அன்னியம் - வேறானவர்;]

எதிர்நிறை - நிரலே நிறுத்தி மொழிமாற்றிப் பொருள் கொள்வது. வேற்றுமைத் தொகைப் பொருள் என்பது வேற்றுமைத் தொகையாக வைத்துப் பொருள் கொள்வது.

— சிவ சிவ


**ஆயுள் சந்தா — தவணை முறையில்**

**ஸ்ரீ குமர குருபரர் இதழுக்கு**

ஆயுள் சந்தா ரூ. 100 செலுத்தினால் உங்களுக்கும் உங்கள் மரபினருக்கும் வழி வழியாக ஸ்ரீ குமர குருபரர் இதழ் கிடைக்கும். இந்தத் தொகையை நான்கு மாதங்களில் 25 ரூபாய் வீதமும் செலுத்தலாம்.

தொகைகள் பணவிடை மூலமாகவோ, வங்கிகள் மூலமாகவோ மட்டும் அனுப்ப வேண்டும். முகவரி:

**நிர்வாக ஆசிரியர்,**
ஸ்ரீ குமரகுருபரர்,
ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள், 612 504.

அட்டைப்பட விளக்கம்

# ஸ்ரீ மெய்கண்டதேவர்

## தா. ம. வெள்ளைவாரணம்

மெய்கண்டதேவர் பெண்ணாகடத்தில் சைவ வேளாளர் மரபில் அச்சுதக் களப்பாளர்க்கு மகவாகப் பிறந்தவர். அச்சுதக்களப்பாளர் நெடுநாள் மகவில்லாமலிருந்து அருணந்தி சிவாசாரியாரின் ஆணைப் படி திருவெண்காட்டுக்குச் சென்று முக்குளத்தில் நீராடி நோன்பிருந் தமையால் இவர் பிறந்தார். அதன் தொடர்பாக இவருக்குச் சுவேத வனப்பெருமாள் என்று இளமையில் பெயர் வழங்கியது. இவரது தாய் மாமன் இவரைத் தம்முடைய திருவெண்ணெய் நல்லூர்க்கு அழைத்துப் போய் வளர்த்து வந்தார். ஐந்து வயது நிரம்பிய காலத் தில் ஒரு நாள் இவர் வீதியில் சிறு தேர் உருட்டி விளையாடிக் கொண் டிருந்தார். அப்போது விண்வழியே சென்ற பரஞ்சோதி முனிவர் இவரது அதிதீவிர பக்குவ நிலையை அறிந்து இவரிடம் அணுகி இவருக்கு ஞான தீட்சை செய்து மெய்கண்டார் என்று பெயர் சூட்டிச் சென்றார். அதுமுதலாக மெய்கண்டார் சித்தாந்தச் செம்பொருளை எடுத்துரைக்கத் தொடங்கினர். இவரிடம் பலர் பாடம் கேட்டு மாணக்கராயினர். இவருடைய குலகுருவாகிய அருணந்தி சிவாசாரி யாரும் அவருக்கு மாணக்கரானார்.

மெய்கண்டார் சிவஞானபோதம் என்ற நூலை இயற்றினார். பன் னிரு நூற்பாக்களால் ஆன அந்நூலுக்கு வார்த்திகப் பொழிப்பு, உதாரண வெண்பாக்கள், சூர்ணிக்கொத்து என்பவற்றையும் இவரே இயற்றியுள்ளார். இவரிடம் ஞானச்செம்பொருள் கேட்டுத் தெளிந்த மாணக்கர் 49 பேர்கள் என்பர். அவர்களில் அருணந்தி சிவாச்சாரி யாரும், மனவாசகம் கடந்தாரும் குறிப்பிடத்தக்கவராவர்.

மெய்கண்டாரின் காலம் 13-ம் நூற்றாண்டாகும்.

---

# ஆலய பூஜைப் படிக்காசு நிதிக்கு

## நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| | 4—9—81 வரை கூடுதல் ரூ. | 12 842-00. |
| 1. | திருச்செங்கோடு திரு: அ. மாரிமுத்து அவர்கள் | 20-00 |
| 2. | தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள் | 5-00 |
| 3. | அடையார் S. R. வெங்கட்ராம் | 5-00 |
| 4. | துர்க்கா குடில் அப்பு | 5-00 |
| 5. | சென்னை K. V. கமலநாபன் | 100-00 |
| | சென்றமாத கூடுதல் விடுதல் | 5-60 |
| | 4—10—81 வரை கூடுதல் ரூ: | 12,982-60 |

உ

சிவ சிவ

மதுரையில்

# கந்தபுராணச் சொற்பொழிவுகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம், அதிபர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி

முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம் நிகழ்த்தப்பெறுவது

துன்மதி ஆண்டு ஐப்பசி 13உ முதல் 18உ முடிய [29--10-81 - 3—11—81] ஆறு நாட்கள். நாடோறும் மாலை 6-30 முதல்

இடம்: தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஸ்ரீ குருஞான சம்பந்தர் திருமடம், வடக்கு மாசி வீதி, மதுரை.

சொற்பொழிவாளர் : துறைசை ஆதீன வித்துவான், காஞ்சீபுரம் திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A. B. T. அவர்கள்

நமரங்காள் வருக !

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்

அருளாணையின் வண்ணம்
முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர்.

---

# பெரியபுராணம் உரைநடை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அருளாணையின் வண்ணம் பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியின் 34 ஆவது வெளியீடாக துன்மதி ஆண்டு ஐப்பசித்திங்கள் விஜயதசமி அன்று வெளிவந்துள்ளது.

விலை ரூ. 12—00

ஆயிரம் பிரதிகளே உள்ளன.

கிடைக்குமிடங்கள்:- மேலாளர்,

ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் 612 504.

மற்றும் அங்கீகரிக்கப் பெற்ற முகவர்கள்.

உ

சிவமயம்

# சிதம்பரச் செய்யுட் கோவை

## A String of Verses on Chidambaram

By Kumaraguruparа Swamigal

Translated into English by K. M. Venkataramiah

### 70

இருகூற்று உருவத்து இருந்தண் பொழில்தில்லை
ஒருகூற்றின் கூத்தை உணராய் மடநெஞ்சே!
ஒருகூற்றின் கூத்தை உணராய் எனின்மற்றுஅப்
பொருகூற்றம் தோற்றப் புலம்பேல்வாழி மடநெஞ்சே!

He has twain form (the masculine and feminine)
He resides at Thillai grove;
He is the God of Dissolution;
You do not perceive His Dance;
Oh simple mind!
If incapable to perceive the Dance of the Lord of Dissoution,
You will suffer at the sight of the warring god of death
Please don't!
Blessed be! Oh simple mind!



# மருந்து



'கண்ணபிரான்'

அவனுக்கு எப்பவும் வியாதி தான். ஒரு வாரம் ஜீரம். ஒரு வாரம் சளி. ஒரு வாரம் வயிற்று வலி. ஒரு வாரம் முதுகுவலி. இப்படி வாரா வாரம் ஏதாவது வியாதியைச்சொல்லிக்கொண்டே இருப்பான்.

அவனுடைய தனியறையில் ஏராள பாட்டில்கள் இருந்தன. எல்லாவற்றிலும் மாத்திரைகள், டானிக்குகள், டிஞ்சர், டர்பண்டைன் இருந்தன.

முன்னெச்சரிக்கையாகவே எல்லா வியாதிகளுக்கும் மருந்துகளை வாங்கி வைத்திருந்தான்.

டாக்டர்கள் ஒவ்வொரு வியாதிக்கும் எழுதிக் கொடுத்த பிரிஸ்கிரிப்ஷன்களை ஒருபைலில் கோத்திருந்தான்.

அவனே கூட கால்வாசி டாக்டராகவும் ஆகிவிட்டிருந்தான் என்றும் சொல்லலாம்.

வேறு யாராவது ஏதாவது வியாதி என்றுசொன்னால்உடனே அவனே இந்த மாத்திரையை வாங்கிச் சாப்பிடுங்க, டக்குனுநிக்கும் என்பான்.

எந்த வியாதிக்கு எந்தடாக்டர் சரியாகக் கவனிப்பார் என்றும் அட்ரஸ் கொடுப்பான்.

அவனுக்குக்கிருமிகளால் வரும் வியாதிகளைத் தவிர விஷக்கடி, இடிபட்டுக் காலில் காயம், முள் குத்தி காயம், சுளுக்கு இப்படியும் ஏற்படும்.

அவனுக்கு இப்போதுவயிற்றில் பெப்டிக் அல்சர். தவிர கையில் முழங்கைக்குக்கிழாகச்சிறுவீக்கம். ஃபைலேரியாவாக இருக்கலாமோ என்றும் சந்தேகம்.

காரமில்லாமல் மோர் சாதமோ கஞ்சியோ வெறும் இட்லியோதான் சாப்பிட்டு வந்தான். முகம் எப்பவும் போல வருத்தக் குறியுடன் இருந்தது. முகத்தில் முக்கால்வாசி வெளுத்துப் போயிருந்த மயிர்கள் அதிகமாகவே நீண்டிருந்தன.

அவனுக்கு வியாதி வந்து விட்டால் அவன் வருத்தமாக முகக்

கோணலுடன் இருந்து விட்டால் தன்னைப் பார்ப்பவர்கள் எல்லோரும் தன்னை விசாரிக்க வேண்டும் என்றும் நினைப்பான்.

அப்படி அனுதாபத்துடன் விசாரிப்பவர்களையே அவனுக்குப் பிடிக்கும். அப்படி விசாரிப்பவர்களை அரை மணி நேரம் ஒரு மணி நேரம் என்று அறுத்துத் தள்ளி விடுவான்.

சிலர் மட்டும்] அவனை விசாரிக்காமல் தங்களுக்கு எத்தனையோ கவலைகள் அத்துடன் இவனுடைய கவலைகளை வேறு கேட்டு இன்னும் மனம் சோர்வு அடைய வேண்டுமா என்று போய் விடுவார்கள்.

அவனுக்குத் தன்னைக் கண்டு பிறர் அனுதாபப்பட வேண்டும், பரிதாபப்பட வேண்டும். ஐயோ பாவம் என்று சொல்ல வேண்டும் என்றுஉள்ளூர ஆசை அநேகமாக வியாதிக்காரர்கள் எல்லோருமே அப்படித்தான் நினைப்பார்கள்.

ஆனல் சிலர் மட்டும் தங்களை அனுதர்பத்துக்குஉரியவர்களாகப் பிறர் நினைத்து விடக் கூடாது என்றே கருதுவார்கள். நல்லவன் என்பதைவிடப் பயங்கர மானவன் அல்லது அசாதாரணமானவன் என்று பெயர் வாங்குவதையே விரும்புவார்கள்.

தாங்கள் பொருமைப்படும்படியாக இருக்கத்தான் விரும்புவார்கள்.

சிலர் தங்கள் வியாதிகளை' கஷ்டங்களைப் பிறர் அறியாதவாறு நடந்து கொள்வார்கள்.

அப்படிப் பட்டவன்தான் கோபால், அந்தத் தெருவிற்குக் குடி வந்து ஒரு மாதமே ஆகப் போகிறது. அவன் போஸ்டாபீஸில் கிளார்க்காக வேலை பார்க்கிருன்.

மூன்று நாட்களாகத் தான் கோபாலும் அவனும் வழியில் பேசிக் கொள்கிருர்கள்.

அன்று மாலையில் கோபால் தன் வீட்டுத் திண்ணையில் பிரம்புச் சேரில் உட்கார்ந்தபடி பேப்பர் படித்துக் கொண்டிருக்க அவன் பையுடன் தெருவில் போய்க் கொண்டிருந்தவன் கோபாலைப் பார்த்து விட்டு இந்த நபரின் அனுதாபத்தையும் பெற்று விட வேண்டும் என்று ''என்ன சார்?'' என்றுகுசலம்விசாரித்துத்திண்ணையில் சென்று அமர்ந்து பேச்சுக்கு இடையேமுகம் சுளித்து கோபால் 'என்னசார்' என்றுசொல்லஅவன் அவிழ்த்து விட்டான் தன் வியாதிகளை.

ஒரு மணி நேரம் அறுத்த பின் கோபால் சிரித்தான்.

''உங்களுக்கென்ன வயசு சார்?''

''முப்பத்தைந்து''

''என் வயசு என்ன தெரியுமா? 'நாற்பத்து இரண்டு. ஒரு நரை

இருக்கா பாருங்க. ஒரு வியாதி கூட என்னை அண்டினதில்லே. நீங்க என்னடான்னு நூத்து கிழவன் மாதிரி பேசுறீங்களே?

'இதோ பாருங்க சார். காலைலே அஞ்சு மணிக்கு எழுந்து குளிங்க. தியானமா உட்கார்ந்து ஏதாவது ஒருமந்திரத்தை மனசுக்குள்ளாற நூத்தி எட்டுதரம்சொல்லிக்குங்க.

ஆத்மார்த்தமா ஒரு கடவுளை வேண்டிங்க. நான் எப்பவும் ஆரோக்கியமா நலமாவே இருக்கேன்னு சொல்லுங்க.நெனைங்க.

அப்புறமா உங்க காரியங்களைச் சுறு சுறுப்பா விரும்பிச்செய்யுங்க. எதையும் விரும்பிச் சாப்பிடுங்க.

சாயங்காலம் தவறும கோயிலுக்குப் போயிட்டு வாங்க. படுக்கப் போறதுக்குமுன்னுடிதியானம் செய்யுங்க. எப்பவும் இனிமையாகப் பேசுங்க. மத்தவங்களைப் பார்த்துப் பொறுமையே படாதீங்க. மனசை அலட்டிக்காதீங்க. உங்ககிட்டே வியாதியே அண்டாது.நான் சொல்றது இயற்கை மருந்து'.

அவன் அசந்து போய்த்தலையை ஆட்டினுன்.

மறு நாளிலிருந்தே அவன் கோபால்சொன்னபடியே செய்து வந்தான்.

இதோ அவன் சிரித்த முகமாக முகக்களையுடன் ஆரோக்கியமாக நடமாடிக் கொண்டிருக்கிறுன்.

அவனுடைய அறையில்இருந்த பாட்டில்களை இப்போது காண வில்லை.

---

உ

சிவ சிவ

# கந்தபுராணச் சொற்பொழிவுகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின்வண்ணம் நிகழ்த்தப்பெறுவது.

துன்மதி ஆண்டு ஐப்பசித் திங்கள் 13 ஆம் தேதி முதல் 18ந் தேதி முடிய (29—10—81 - 3—11—81)

ஆறு நாட்கள் நாடோறும் மாலை 6-30 முதல்

இடம்: காஞ்சிபுரம் குமரகோட்டம்

அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

சொற்பொழிவாளர்:

ஒரத்தநாடு திரு. எம். கிருஷ்ணமூர்த்தி காஞ்சிபுரம்.

நமரங்காள் வருக.

ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள்.
10—10—81

அருளாணையின் வண்ணம்
மூத்து. மெய்கண்டதேவன்
மானேசர்.

# "சித்தியார் காட்டும் சக்திநெறி"

சித்தாந்தப் புலவர்.
புலவர். இராச. இராமலிங்கம் எம். ஏ.,

வேதங்களிலும், ஆகமங்களிலும் எளிதில் விளங்கிக் கொள்ள இயலாத சிலநுட்பமான உண்மைகளைப் புராணங்கள் நமக்கு வரலாறுகளாகச் சொல்லி விளங்க வைக்கின்றன. அந்த நுட்பங்களைப் புராணங்களையன்றி வேறு எவற்றினாலும் அறிந்து தெளிதல் என்பது இயலாத காரியம். புராணங்கள் கடவுள் திரிபுரங்களை எரித்ததினைக் கூறுகின்றன. இதனைத் திருமூலர்,

"முப்புரம் என்பது மும்மல காரியம்
அப்புரம் எரித்தமை யாரறிவார்களே"

என்று அதன் உண்மையினை விளக்குவார் – அதுபோல எல்லாவற்றுக்கும் மேலாகிய பரம்பொருள் என்று கூறப்படும் கடவுளரிலும் ஆண் – பெண், கணவன் மனைவி இல்லற வாழ்வு உண்டா? ஆலயங்கள் தோறும் திருக்கல்யாண உற்சவம் சிறப்பாக நடைபெறுகின்றனவே என்று சந்தேகம் நமக்கு உண்டாகலாம், இதனையே சிலசமயங்கள் கடவுளுக்கும் குடும்பம் உண்டு என்றால் நமக்கும், அவருக்கும் என்ன வேறுபாடு என்று கூறும். இதன் உண்மை என்ன என்று சந்தான குரவர்களில் ஒருவராகிய அருணந்தி சிவத்தினைக் கேட்டால் உண்மை விளங்கும்:

வகுப்பறையினில் ஆசிரியர் பாடம் நடத்துகின்றபோது சில சமயங்களில் தம்பி உனக்கு விளங்கிக்கொள்ள சக்தி இருக்கின்றதா! என வினவுதல் உண்டு. சக்தி இருக்சின்றதா என்றால் நான் சொல்வதைப் புரிந்து கொண்டு தெளிய உனக்கு அறிவாற்றல் இருக்கின்றதா என்பது பொருள். இவைபோல விரும்பும் ஆற்றல்; செய்யும் ஆற்றல் என்றும் உண்டு. அவைகளை இச்சா சக்தி; கிரியா சக்தி; ஞான சக்தி என்று கூறுவர். இந்த மூவகை சக்திகளும் எதிலிருந்து தோன்றின. அவைகள் பரம்பொருளிடத்தும் உள்ளனவே! என்று நினைக்கின்றபோது, பரம்பொருளிடத்து நீங்காமல் என்றும்உள்ளது அருள் தானே, அதனால் தான் "அருளது சக்தியாகும் அரன் தனக்கு"– என்கிறோம். இதனால் சக்திஎன்பது அவனுடைய அருளேயன்றி வேறன்று.

அப்படியாயின் அதனைப் பெண்ணுருவாக வைத்து வழிபடுவது ஏன் எனச் சிந்தனை எழுவதுண்டு. அருள்என்றால் கருணை. கைம்மாறு வேண்டாத அன்பு. அதற்குத் தாய்மையாகிய பெண்ணுருவையன்றி வேறு எதுவும் கருத

முடியாது. ஆகவே பெண்ணுரு வாகவே தியானிக்கப்படுகின்றது. பரம்பொருள் எல்லாவுயிர் களிடத்தும் கலந்து ஒன்ருக விளங் கும்போது அவருடைய சக்தியும் கலந்து இருத்தல் இயல்பு.

சக்தி ஒன்ரு பலவா என்ற ஐயம் எழுதல் உண்டு. பலகோடிக்கணக் கான உயிர்களுக்கு உடையவன் ஒருவனுக இருக்கும்போது, அவ னுடைய சக்தியும் ஒன்ருகத்தான் இருக்கமுடியும். அடுத்து, சக்திக்கு உருவம் உண்டா? இல்லையா? இல்லையெனில் அதனை அறிதல் எங்ஙனம் என்றும் வினவும்போது, ''சக்தி தன் வடிவேது என்னில் தடையிலா ஞானமாகும்'' என்று சிவஞான சித்தியார் கூறும். ஆகை யால் சக்தியின் வடிவம் ஞான மாகும்.

சக்தியும், சிவமும், பூவும் மண மும் போல, தீயும் சூடும் போல, குணமும் குணியும் போல ஒன்ருக இருப்பதால் சக்தியை மனைவி என்றும்; பரம்பொருளை கணவன் என்றும் கூறுகின்ருேம். சிவம், சக்தியாலன்றி எத்தொழிலையும் செய்யாது. "சிவமெனும் பொரு ளும் ஆதி சக்தியொடு புணரின் அல்லது எத்தொழிலும் செய்ய வல்லதல்லதாம்'' என்பவர், அங்ஙனமே சக்தியும் ''எத்திறம் நின்ருன் ஈசன் அத்திறம் அவளும் நிற்பவள்'' என்றும் கூறும் சித்தியார்.

இந்தத் தத்துவத்தினை விளக்க வந்த சிவாகமங்கள் கிரியா பாதத் தில் சக்தியைப் பெண்ணுருவாக உபசரித்து திருக்கல்யாண உற்ச வம் செய்ய விதி வகுத்தது. சிவம் போகியாய் இருந்தால் அன்றி உலகத்து உயிர்கள் போகம் நுக ராது என்பதனை ''போகியாயிருந் துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்'' என்று சித்திநெறிகூறும். இதனுல் ஆன்மாக்களாகிய உயிர் கள் மீது வைத்த கருணையினுல் இறைவன் போகியாகவும்; யோகி யாகவும் இருந்து, சிவம், சக்தி நிலையில் காட்சியளிக்கின்ருன் என்பது விளக்கும். இதனைச் சிவஞான சித்தியார்,

''அருளது சக்தியாகும்
அரன்றனக்கு அருளையின்றித்
தெருள் சிவமில்லை யந்தச்
சிவமின்றிச் சக்தியில்லை
மருளினை அருளால் வாட்டி
மன்னுயிர் களிப்பன் கண்கட்கு
இருளினை ஒளியால் ஓட்டும்
இரவியைப் போல ஈசன்

என்று கூறுகின்றது.



## 44. மனநிறைவுடனிரு

புகழ் அல்லது தன்னை, இவற்றில் எதை ஒருவன் அதிகமாக
நேசிக்கின்றான்?
தன்னுடைய உடல், உயிர், அல்லது தன்னுடைய உடைமைகள்
இவற்றுள் எது அதிக மதிப்புடையது?
தன்னையே இழத்தல் அல்லது தன் உடைமைகளை இழத்தல்
இவற்றுள் எது மிகவும் தீயது?
ஆகையால் எவனொருவன் மிகவும் நேசிக்கின்றானோ
அவன் மிகவும் செலவு செய்கின்றான்[1]
எவனொருவன் மிகவும் சேகரித்துப் பதுக்கி
வைக்கின்றானோ அவன் மிகவும் இழக்கின்றான்.
மனநிறைவு உள்ள மனிதன் மானமிழப்பதில்லை;
எவனொருவன் எப்பொழுது நின்றுவிட வேண்டு-
மென்று அறிந்திருக்கின்றானோ அவன் அபாயத்திற்கு
ஆளாவதில்லை —
அவனால் நெடுநாள் நீடித்து வாழ முடியும்.

## 45. வீரமைதியுள்ள சோஹம் நிலை[2]

தலைசிறந்த செய்வினைமுற்றிய[3] திறம் செய்வினை குறைந்த திறம்
போல இருக்கும்
அதன் பயன்படும் தன்மை என்றும் குன்றுவதில்லை
அளவுகடந்த அபரிமிதம் பற்றாக்குறைபோல இருக்கும்.

1. இவ்வதிகாரத்தின் தலைப்பில் உள்ள மூன்று கேள்விகளுக்குச் சரியான விடை (1) தன்னை, (2) தன்னுடைய உடல், உயிர், (3) தன்னையே இழத்தல் என்பன ஆகும்.

2. சோ - ஹம் நிலை - இதனைத் தாயுமானவர் 'சும்மா' என்பார்! ''சும்மா இருக்க அருளாய்'' 'சும்மா' 'சோ - ஹம்' மின் திரிவு

3. perfect - 'செய்வினை முற்றிய (முடி)'-திருமுருகாற்றுப்படை வரி 83 (திருச்சீரலைவாய்)

அதன் பயன்படும் தன்மை தவறுவதில்லை
எது மிகவும் நேராக இருக்கிறதோ அது சுற்றி வளைந்து:
செல்வது போலிருக்கும்,
ஒப்பற்ற கைத்திறம் ஏடாகோடமான செயலாகத் தோன்றும்
ஒப்பற்ற நாநலம் திக்குவாய்ப் பேச்சுப்போலிருக்கும்
(ஒரே இடத்தில் இருக்காமல்) அங்குமிங்கும் இயங்கல்
குளிரைப் போக்குகிறது.
ஆனால் அசைவின்றி ஒரே இடத்திலிருத்தல் வெப்பத்தைப்
போக்குகிறது
எவனொருவன் கலங்காமல் அமைதியாயிருக்கின்றானோ
அவன் உலகுக்கு வழிகாட்டியாகின்றான்-

## 46. பந்தயக் குதிரைகள்

உலகம் டௌவுடன் ஒற்றுமையோடு வாழும்போது
பந்தயக் குதிரைகள் குப்பை வண்டிகளை இழுக்கும்படி
(குதிரைப்படையிலிருந்து) திருப்பி அனுப்பப்படுகின்றன.
டௌவுடன் ஒற்றுமையோடு உலகம் வாழாத போது
குதிரைப் படைகள் நாடெங்கும் மலிந்து காணப்படுகின்றன;
மனநிறைவுஇன்மையைப் போல மிகப்பெரிய சாபம்
வேறொன்றுமில்லை.[1]
உடைமைகளை உடைத்தாயிருக்க வேண்டுமென்ற விருப்பத்தைப்
போல மாபெரும் பாவமில்லை.
ஆகையால் எவனொருவன் மனநிறைவோடு மனநிறைவு
உற்றிருக்கிறானோ அவன் எக்காலமும் மனநிறைவு
உடையவனாயிருப்பான்;

---

1. ''செல்வம் என்பது சிந்தையின் நிறைவே, அல்கா நல்குரவு அவாஎனப் படுமே'' என்றார் குமரகுருபரரும்.

# திருப்புனவாயில்

வித்துவான்: தா. குருசாமி தேசிகர் மதுரை-1

ஊரின் பெயர்கள் தமிழ்மொழியில் முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள்களால் பல அமைந்துள்ளன. பண்டைத்தமிழகத்தின் இயற்கைவளம் இதன் மூலமாக அறிய வருவதோடு இறை உணர்வு மேம்பாடும் அறியப்பட இருக்கின்றது. 'வாயில்' என்ற பெயரில் தமிழ் நாட்டில் பல ஊர்கள் இருந்துள்ளன — இந்ஞான்றும் இருந்து வருகின்றன.

இந்த 'வாயில்' என்ற ஊர்களில் புனவாயிலும் ஒன்று. பண்டைக்காலத்தில்அண்ணல் வாயில் என்று அழைக்கப்பட்டது இன்று சிற்றண்ணவாயில் (சித்தன்ன வாசல்) என்று வழங்கப்படுகிறது. ஆலவாயில், குடவாயில், குணவாயில் முதலிய ஊர்ப்பெயர்கள் இன்றும்வழக்கில் இருந்து வருகின்றன. புனவாயில் என்பதும் இன்று வழக்காற்றில் விளங்குகின்ற பெயராக உள்ளது. இன்று இது திருப்புனவாசல் என்ற பெயரோடு (தஞ்சைமாவட்ட இராமநாதபுர மாவட்ட கீழ்க் கடற்கரை) பாண்டிய நாட்டுத் தலமாக விளங்குகிறது. இத் தலத்தின் வரலாற்றைக் காண்போம்.

திருப்புனவாயில் பாண்டிய நாட்டில் உள்ள சிவத்தலங்கள் பதினுன்கில் ஏழாவது திருத்தலமாகும். திருஞானசம்பந்தர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோரின் தேவாரப் பாடல்கள் பெற்றது. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய அடைவு திருத்தாண்டகத்தில் ஒரு பாடல்-'புனவாயில் புகுவாரைக் கொடுவினைகள் கூடாவன்றே' என்று கூறுகின்றது.

கல்வெட்டுக் குறிப்புகள்:-

இவ்வூர்க் கோயிலில் பாண்டியர்களில் கோனேரின்மை கொண்டான், திரிபுவனச்சக்கரவர்த்தி, விக்கிரம தேவபாண்டியன், வீரபாண்டியன், சுந்தரபாண்டியன் இவர்கள் காலங்களில் செதுக்கப்பட்ட கல்வெட்டுகள் இருக்கின்றன. இக்கல்வெட்டுகளில் இறைவர் திருப்புனவாசலுடைய நாயனுர் எனக் குறிக்கப்படுகின்ருர். இவ்வூர் முத்தூர்க் கூற்றத்துக்கு உட்பட்டிருந்தது.

கோச்சடைய பன்மரான வீரபாண்டியதேவன் தன் ஆட்சியின் பதினுன்காம் ஆண்டில் தன் பேரால் ஏற்படுத்திய வீரபாண்டி

யன் சந்திக்கு நித்திய அமுதுக்கு வேண்டும் அமுதுபடி, கறியமுது, திருமஞ்சனம், திருமேற்பூச்சு, எண்ணெய்க் காப்பு, திரு விளக்குக்கு எண்ணெய். திருப்பரி வட்டம் மற்றும் வேண்டடத்தக்க வைகளுக்கு நில நிவந்தம் அளித் திருந்தான். கோச்சடைய பன் மரான சுந்தரபாண்டிய தேவரின் காலத்தில்ஒருகுடையான் அழகிய் மணவாளப் பெருமாளான காலிங் கராயன் தன்பேரால் ஏற்படுத் திய காலிங்கராயன் சந்திக்கு நிலம் விட்டிருந்தான். இச்செய் திகள் (South Inscription) Part IIல் உள்ளன. நகரத்தார் திருப் பணிகளையும் பிற்காலத்தில் பெற்று அமைதியாக விளங்குகிறது இத் தலம்.

ஆலய அமைப்பு:

சுற்றுப் புறத் திருமதில்கள் சூழ அர்த்தமண்டப மகாமண்டப கருப்பக்கிரக விமானங்களுடன் திருக்கோபுரத் திருவாயிலோடும், கடற்கரையிடத்து அழகோடுந் திகழ்கிறது. இறைவர் பழம்பதி நாதர். மிகப்பெரிய ஆவுடையா ருடன் பொருந்திய இலிங்கத் திருவுருவினர். இறைவி கருணை நாயகி. தவிர விநாயகர், சுப்பிர மணியர், இலக்குமி, துர்க்கை, சண்டீசா ஆகிய மூர்த்திகளும் அகத்திய இலிங்கம் பாண்டி நாட்டுத்தலஇலிங்கங்கள் முதலிய மூர்த்திகளோடு விழா மூர்த்தி களும் உள்ளனர்.

இத்தலத்துப் பெருமானாகிய இலிங்க உருவுக்கு மூன்றுமுழமும் ஆவுடையார்க்கு ஒரு முழமும் பரி வட்டமாகச் சாத்தப்படுகிறது. 'மூன்றுமுழமும்ஒருசுற்று முப்பது முழமும் ஒருசுற்று' என்ற பழ மொழியும் இப்பகுதியில் வழங்கி வருகிறது. இத்தலம் தேவகோட் டையிலிருந்து பஸ் மார்க்கமாக 13மைலில் உள்ள திருவாடானை யிலிருந்து 7மைலில் உள்ளது. இத்தலத்தில் 10 தீர்த்தங்கள் உள்ளன. தல விருட்சம் - புன்னை மரம். இத்தலத்தில் செவ்வாய் வழிபட்ட காரணத்தால் அவ் வாரத்தில் வழிபடுவோர் நலம் பல பெறுவர் எனப் புராணம் கூறுகிறது.

பாண்டியன் வழிபட்டது

பாண்டிநாட்டு மன்னருள் ஒருவர் விக்கிரம பாண்டியர் தம்பால் உள்ள குற்றம் நீங்கிட இத்தலத்தில் மூன்றாண்டுகள் உறைந்து பெருமானை வழிபட் டார். பாண்டியநாட்டுத் தலங் கள் பதினான்கையும் நினைவிற் கொண்டு அத்தல மூர்த்திகளைப் பிரதிட்டை செய்து இத்தலத்தில் வழிபட்டார். பணிபல செய்து பாங்குடன் விளங்கிய பாண்டியர் தலைநகரடைந்து திருப்புனவாயி லுடைய நாயனார்க்குப்பல நில தானங்கள் அளித்த செய்தி கல்வெட்டில் (Ins S.I.184 of 185) காணப்படுகிறது.

திருமுறையில் திருப்புனவாயில்:

திருஞானசம்பந்தரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அருளிய இரண்டுபதிகங்களிலும் புனவாயிலின் இயற்கை அழகு விதந்து ஓதப்படுகின்றன. புன்னைமரங்களில் மலர் பொன்போல் விளங்கும் என்றும், பாடல் ஆடல் மல்கி விளங்குவது என்றும், பொந்தில் உறைகின்றஆந்தைகள் பாடுகின்ற புனவாயில் என்றும் புகழப்படுகின்றன. கடல் வளம்-நெய்தல் நில மேன்மை புனவாயில் தலத்தின் தனித்தன்மையாகும். கண்டல்-ஞாழல்-மரங்கள் அடர்ந்துள்ளன. புனம் – என்பது காடு என்ற பொருளில் வழங்குகிறது. வாயில் என்பது இல்வாய் என்பது போல இருப்பிடமுன் வாயில் என்ற பொருளில் வழங்குகிறது.

'சித்த நீநினை என்னொடு
சூளறும் வைகலும்
மத்த யானையின் ஈருரி
போர்த்த மணாளனூர்
பத்தர் தாம் பலர் பாடிநின்
றாடும் பழம் பதி
பொத்தில் ஆந்தைகள்
பாட்டறாப் புனவாயிலே'

என்று சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடுவதற்கிணங்க இன்று ஆந்தைகள் குரல்கொடுப்பது காணத்தக்கதாகும்.

திருஞானசம்பந்த சுவாமிகள் பாடிய காந்தாரபஞ்சமப் பதிகத்தில்,

'புன்னை நன் மாமலர்
பொன்னுதிர்க்கும் புனவாயிலே'

—என்று குறிப்பிடப் படுவது இப்போதும் மெய்யாய்நின்று புன்னை மரங்கள் மலர் வழங்குவது காணத்தக்க சிறப்பாகும்.

இனிய இரண்டு பதிகங்களும் பதிக அமைப்பில் சிறந்து விளங்குகின்றன. தேவாரப் பதிகங்கள் பெற்ற பாண்டி பதினான்கு தலங்களுள் ஒன்றான திருப்புனவாயிலை வழிபட்டு உய்வோமாக.




## சைவம் தழைக்க......

"ஞானசம்பந்தம்" தருமையாதீனத்திலிருந்து வெளிவரும் அரிய சமய இலக்கியத் திங்கள் இதழ். **ஆண்டுச் சந்தா:** உள்நாடு ரூ. 9. ஸ்ரீலங்கா ரூ. 11. வெளிநாடு ரூ. 17. **ஆயுள் சந்தா:** உள்நாடு ரூ. 100. வெளிநாடு ரூ. 125. முகவரி:- செயலாளர், "ஞானசம்பந்தம்" செயலகம், தருமபுரம், மாயூரம் 609 001, தஞ்சை மாவட்டம்.

# விடையரங்கம்

**வினு**

சம்பந்தர்க்குத் தானே நினைந்தும் சுந்தரர்க்கு அவர் கேட்ட அளவிலும் அப்பர்க்கு அவர் கேட்ட பின் தாமதித்தும் பேறுகளை நல்கியமையில் காணப்படும் வேறுபாட்டிற்குக் காரணம் என்ன? அகிலம் படைத்தருளும் அண்ணலின் அருள் வெளிப்பாட்டில் ஏற்றத்தாழ்வுகள் ஏன்?

மெய். சந்திரசேகர் பி. லிட்.,

**விடை**

மகாவித்துவான்
ச. தண்டபாணி தேசிகர்,

1. மூவரும் ஆணைவழித் தோன்றிய அருட்பிறப்பாளர்கள். இறைவன் அருள் வழங்கு முறையை அவர்கள் வாரம் பற்றியது என்று எண்ணினல் அல்லது அது இறைவன்பாற் குறையாகாது.

2. அவர்கள் தொண்டு முற்றிய நிலைகண்டு அவ்வப்போது அருள் செய்திருக்கிறுர்கள் என்பதில் ஐயத்திற்கு இடமின்று.

3. மூவரும் நெறிகாட்டவும் நெறிபரப்பவும் வந்தவர்கள். அப்பர் நெறியில் யாம் அனைவரும் முயலலாம். நமக்கு அவர் வழிகாட்டியாகப் பல வேறு நிலைகளில் இருந்தே காட்டவேண்டும். ஆதலால் அவர் கேட்டும் பல காலங் கழித்து இறையருள் கிடைத்தது.

மகன் முறை, தோழன் முறையில் நிற்பாரை அவர்கட்குப் பின் வரலாற்றுக்காகவாவது வேறு ஒருவரைக் கேட்டிலேம் என்பது சிந்தனைக்குரியதன்றே?
இறுதியாக

'' ஆட்பாலவர்க்கு அருளும்
வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பானபுகில் கிளக்க
வேண்டா.'' ஆதலால்

காரணத்தின் முடிந்தஇடமே கடவுள் அருள் என்பதைத் தெளியலாம்.

இதனைப் பற்றிய கட்டுரையைப் பின்வரும் திங்களிதழிற் காணலாம்.

''Reasontfaith'' Siddhantham
J. M. Nallasamipillai.

கா. ம. வேங்கடராமையா. எம். ஏ.,

''ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும்
ஆதி மாண்பும்
கேட்பான்புகில் அளவில்லை
கிளக்க வேண்டா''

என்பது ஞானசம்பந்தர் ஆணை.

தம் அடியார்கட்கு அருள் செய்யும் முறைகள் எவ்வண்ணம் அமைதல் வேண்டும் என்று இறைவனுக்குத் தெரியும். நாம் அதைப் பற்றி ஆய்வு செய்ய வேண்டியதில்லை. எனினும் மெய் - அன்பர் வினவி விட்டார். ஆய்ந்து பார்க்கலாம்.

சம்பந்தர்க்கு, இறைவன் தானே நினைந்து எல்லாப் பேறுகளையும் தந்தார் எனல் பொருந்தாது. ஞானப்பால் ''அம்மே அப்பா'' என்று அழுத பின்னரே கொடுக்கப்பெற்றது. ''இதுவோ எமை ஆளுமாறு'' என்று பாடிய பின்னரே தான் பொற்கிழி அளிக்கப்பெற்றது. ''வாசி தீரவே காசு நல்குவீர்'' என்று வேண்டிய பின்னரே நற்காசு பெறப்பட்டது. சம்பந்தர் கேட்காமற் பெற்றவை ஏறுதற்குச் சிவிகை; இடக்குடை; கூறிஊதக் குலவு பொற் சின்னங்கள்– இவை திரு அரத்துறையில் பெற்றவையாம். திருப்பட்டீச்சரத்தில் முத்துப் பந்தர் பெற்றார். இங்ஙனமே மற்றை இருவரும்ஏன் பெறவில்லை என்று கேட்பீர்களோ? சுந்தரர் பெற்றவை அளப்பில.

இனித் திருநாவுக்கரசர் தாமதமாகப்பெற்றபேறு மறைக் கதவம் திறத்தல் ஆகும். தாமதத்துக் குக்காரணம்ஆகச் சேக்கிழார் சுவாமிகளே,

''பயன்துய்ப்பான் திருக்காப்பு
நீக்கத் தாழ்க்க''

என்பர். உலகமக்கள் நினைப்பது போல் கூறவேண்டுமானால் பன்னெடு நாட்கள் திறக்கப்படாதிருந்த கதவு திறக்கநேரம் ஆகும் என்பது இயல்புதானே. வலிந்து திறந்ததாயினும் அதனை மூடுவது எளிதில் அமையும் என்பதும் இயல்பே.

வீழிமிழலையில் கேளாமலே சம்பந்தர் போன்று அப்பரும் படிக்காசு பெற்றார். அங்கு வாசியில்லாக் காசு பெற்றது வாகீசர் தானே! இதனாலல்லவா சம்பந்தர் ''ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதி மாண்பும் ஆய்தல் வேண்டா' என்று பணித்தார்.

திருநாவுக்கரசருக்குத் திருப் பைஞ்ஞீலியில் அழிவாம் பசிவந்தெய்திட இறைவன் தானாகவே ''காவும் குளமும் அமைத்துப் பொதிசோறு கொணர்ந்து'' கொடுத்தருளினர். எனவே ஆசிரியர்க்குத் தானாகவே இறைவன் அருளினர் என்பதும் போதரும்.

சுந்தரர்க்குக் கேட்ட அளவில் நல்கினர் என்பதும் ஐயத்துக்கு இடம் அளிப்பதே. திருமுது

குன்றில், ஆற்றில் இட்டபொன்னை எடுக்கையில் மாற்றுக் குறைந்து காணப் பெறப் பின் பாடிய பின்னரன்றே நன்பொன் கிடைத்தது.

திருக்குருகாவூரில் சுந்தரர் கேளாமலே ''கருத்தறிந்து தண்ணீரும் பொதி சோறும் கொணர்ந்து'' பந்தரும் அமைத்து உதவினுர் சிவபெருமான். திருக்கச்சூரில் இறைவனே மனைகள் தோறும் சென்று இரந்து உணவு பெற்றுச் சுந்தரருக்கு அளித்தார் என்று பெரிய புராணம் பகரும்.

இவ்வாற்ருன் இம்மூவர் முதலிகளுக்கும் இறைவன் தானே நினைத்துக் கொடுத்தார்; கேட்ட பின் கொடுத்தார்; கேளாமலும் கொடுத்தார்–என்றுதெரியவரும். இதனுல் அருள் வெளிப் பாட்டு முறையில் ஏற்றத்தாழ்வுகூறு உண்டு என்று கொள்ளுதல் பொருந்தாமை வெளிப்படை.


Phone No: 222 Tel. Add. "JEWELLERY"
T. N. G. S. T. No. 209126. Post Box No. 14
L. No. 8/77. Residence Phone No: 622

தரம் மிக்க தங்க நகைகளுக்கு

ஸ்ரீ நடராஜ விலாஸ்
ஜுவல்லரி ஹால்
சிதம்பரம்

முகவரி

செ. ரெத்தினசாமி செட்டியார் சன்ஸ்

உரிமையாளர்கள் :
நடராஜ விலாஸ் ஜுவல்லரி ஹால்
26, 27, 28, கடைத்தெரு, சிதம்பரம்.
தென்னுர்க்காடு மாவட்டம் — 608 001.




திருமுறைக் கலாநிதி இசை நம்பி
S. கல்யாணசுந்தர தேசிகர்
ஸ்ரீ காசிமடம் திருமுறைப்பணி, கும்பகோணம்

தேவாரப் பாடல்கள் மனித நிலையைக் கடந்த தெய்வத் திரு மறைகள், எண்நிறைந்த பண்களை தாமகத்தே கொண்டு சம்பந்தர் அப்பர் சுந்தரர் மூவரும் பாடியுள்ள தேவார இசைப்பாடல்கள் உள்ளம் கமழும் பண்கள் வகுக்கப் பட்டு இருக்கிறது. அவற்றுள் சில பண்களே பரவியுள்ளது. எஞ்சிய பண்கள் மறைந்தொழியும் நிலைமையிலிருக்கிறது. அவற்றை ஆராய்ந்து தெளிவுபெற நம்மால் இயன்றளவு பழமையான பண்களை அனுபவ வாயிலாகத் தெரிந்து பழந்தமிழ் இசைப் பாடல்களாகிய தேவாரப் பாடல்களைத் தெருவெல்லாம் முழங்க நாமெல்லோரும் ஒருங்கிணைந்து அதற்குள்ள பழந்தமிழ் இசைப் பண்முறை மாறாது உள்ளுருகித் தேனமுதப் பாக்களாகிய தேவாரத் திருமுறை பாடல்களால் இறைவனை மகிழ்வித்து அவனது அருளைப்பெற வேண்டும்.

இப்போது ஆராய்தற்குரிய பண் குறிஞ்சி. இந்தக் குறிஞ்சியென்றபண் சம்பந்தர் அப்பர் சுந்தரர் மூவரும் பாடியுள்ள தேவாரத்தில் காணும் பண் ஆகும். இந்தப்பண் மிகப்பழமையான தமிழ்இசை ராகம். மூவரும் அதன் சுவையறிந்து மனம்கமழும் வண்ணம் பாடியுள்ளார்கள்.

இந்தப் பழமையான குறிஞ்சி ராகத்தின் உண்மையான ராக சஞ்சாரங்களை ஆராயவும் அதன் லக்ஷணங்களின் உண்மையறிய பழமையான நூல்கள் கிடைக்கவில்லை. ஆனால் கிடைக்கும் நூல்களிலோ குறிஞ்சிப்பண்ணைப் பாடும் முறைகளைத் தெளிவாகச் சொல்லப்படவுமில்லை. இருந்தாலும் தேவாரப் பாடலில் அமைந்துள்ள தமிழ் இசைப்பண்ணைத் தலைமுறையாகப் பாடிவரும் தேவார இசைவல்லுனர்களால் காப்பாற்றிவரும் ஓதுவார்களைக் கொண்டு பாடச்செய்து கேட்பின்

இந்தக் குறிஞ்சியென்றபண்ணின் இராக சஞ்சாரத்தின் உண்மை ஓரளவு விளங்கும்.

இந்தக் குறிஞ்சி ராகம் பழமை யான ராகங்களில் பிரசித்தி பெற் றுள்ள 29 மேளமாகிய தீர சங்க ராபர்ணத்தின் ஜென்னியமாக அமைந்திருக்கிறது.

இந்தக் குறிஞ்சி மிகப்பழமை யான தமிழ் இசைப் பண்ணுகும். இந்தப்பண்ணுக்குச் சங்கராபர்ண சுரங்களும் உண்டு.

இதன் ஆரோகணம்
நீ ஸ ரி க ம ப த
அவரோகணம் த ப ம க ரி ஸ நீ

என்று அமைந்துள்ளது. இந்தக் குறிஞ்சியென்ற ராக சஞ்சாரத் தின் அவரோகணத்தில் நிஷாத கார்வையுடன் நிற்கும் மூர்ச்சனை யின் ஏழு சுரங்களில் மட்டும் சஞ் சாரத்தை உடையதாகக் காணப் படுகிறது. இதன் மூர்ச்சனை நிஷா தத்தில் துளங்கி தைவத்தில் முடிகிறது. இந்த ராகத்தின் பிர காரம் அவரோகணத்தில்தான் கிடைக்கிறது. இந்த ராகசஞ்சா ரத்தில் சங்கராபர்ணசாயையும் சங்கராபர்ண சுரங்களும் உண்டு.

இதன் அம்சம் நிஷாதம். அதற்கு சம்வாதி அதற்குமேலுள்ள காந் தாரம். இந்த ராகத்தின் முக்கிய மான கார்வை கடைசி சுரமாகிய நிஷாதமே அம்சமாக அமைந் துள்ளது. அதாவது வாதி அம்ச மாவதற்குப் பதிலாகச் சம்வாதி அம்சமாகிறது. அம்சம் நிஷாத மும் சம்வாதி மேலுள்ள காந்தாரமும்.

இந்தக் குறிஞ்சியென்ற பண் இறைவனது அருளால் ஆற்ருத சூலை நோய் காற்றுய்ப் பறக்கப் பாடிய ஆளுடைய அரசும் தேனமுதப் பாக்களால் இறைவனை மகிழ்வித்த ஞான சம்பந்தப் பெருந்தகையும் திரு வீழிமிழலையின் இறைவனை வழிபட்டிருக்கும் நாளிலே அது சமயம் நாட்டில் பஞ்சம் உண் டாகி மக்கள் உணவு கிடைக்காது வருந்தின காலத்திலே இந்தக் குறிஞ்சியென்ற இராகத்தில் உள்ள தேவாரப் பண்ணைச் சிவ ஞர் மனம்குளிரத் தமிழ் இசைப் பண்ணைப் பாட பஞ்சம் நீங்கியது. இதனை மக்கள் கேட்டுப் பரவசம் அடைந்தார்கள். இத்தனை சிறப்பு வாய்ந்த பண்தேவாரத் தில்காணும் குறிஞ்சி என்ற ராகம்.



# சைவ சித்தாந்தம்

சித்தாந்த சிகாமணி, அருட்பாமணி,
*S.* இராமலிங்கம் *B. Sc., (Ag) B. L.*

## தடைகள்:

சைவசித்தாந்தத்தின் குறிக்கோள் இறைவன் திருவடிப் பேற்றை அடைந்து பின் ஆன்மா இறைவனுடன் இரண்டறக் கலந்து நின்று பேரானந்தம் அடைந்து முக்தி அடைய வேண்டும் என்பது. பின் அத்தியாயங்களில் இறைவன் திருவடி, திருமுகம், திருமுடி என்பது என்ன என்றும் அவைகளை அடைந்து உண்மை சிவதரிசனம் எப்படி ஏற்படும் என்றும் விரிவாகப் பார்க்கலாம். இப்போது நாம் இறைவனை அடைய நமக்கு உள்ள தடைகள் என்ன என்பதைப் பற்றிச் சிந்திப்போம். திருவடியை அடைய நான்கு தடைகள் உண்டு. அவை:

1. சரீரம்
2. இந்திரியம்
3. அந்தக்கரணம் (மனம், சித்தம், புத்தி, அகங்காரம்)
4. அறியாமை.

## சரீரம் (உடல், மெய், உடம்பு):

சரீரம் என்பது நமது உடம்பைக் (தேகம், தனு, உடல்) குறிக்கின்றது. 'அரிது அரிது மானிடராய்ப் பிறப்பது அரிது' என்பது சான்றோர்கள் வாக்கு. இச்சரீரம் ஆன்மா உய்ய ஒரு கருவியாகும். அப்படி இருக்கும்போது இந்தச் சரீரம் திருவடி ஞானத்திற்கு எவ்விதம் தடையாகும் என்கின்ற கேள்வி எழும். இந்தச் சரீரம் அழியக் கூடியது. இந்தச் சரீரமே நாம் என்ற எண்ணம் கொண்டு செயல்படக் காரணமாகிறது. அப்போது இச்சரீரம் திருவடி ஞானத்திற்குத் தடையாகும். நாம் இந்தச் சரீரத்தையே நாம் என்று எண்ணி உண்மையில் நாம் யார் என்று தெரியாமல் இருக்கின்றோம். இச்சரீரம் நமக்குச் சாதனமாக உபயோகப்பட வேண்டியது. அந்நிலையில்

தடையாக இருக்கின்றது. இறந்த பிறகு அதற்குப் பிணம் என்ற பெயர் சூட்டப்படுகிறது. நாம் வாழ்வில் காணும் நிகழ்ச்சிகளைப் பார்த்தால் இச்சரீரத்தின்பால் அவ்வளவு பற்றுத் தேவையில்லை என்பது தெளிவு பெறும். ஒரு மேல் நாட்டுப் பேரறிஞர் நம் சரீரத்தை எரித்தால் எலும்பு, பாஸ்பரஸ் என்ற சத்து இவையெல்லாமாகச் சேர்த்து ரூ. 13.00 என்று மதிப்பிடுகிறார். அதன் கருத்து அதற்கு அதிகமாக பந்தம் வைத்துக் கொள்ள வேண்டாம் என்பது. நாம் ஒரு தெரு வழியே செல்கின்கிறோம். அப்போது நல்ல மழை பெய்கிறது. நாம் போட்டிருக்கும் செருப்பு பிய்ந்து விடுகிறது. யார் வீட்டிலாவது நுழைந்து அதை விட்டு விட்டுப் போய் மறுநாள் வந்து எடுத்துக் கொள்கிறோம் என்றால் யாரும் மறுக்காமல் விடுவார்கள். ஆனால், அதே மாதிரி ஒருவரின் பிணம் அந்த வீதியில் செல்லும் போது மழை பெய்தால் உங்கள் வீட்டில் மழை ஓயும் வரை வைத்திருந்து எடுத்துச் செல்கிறோம் என்றால் விடுவார்களா. அதுதான் நம் சரீரத்திற்கு உள்ள மதிப்பு. ஆகையால் இந்தச் சரீரத்தின் பால் ஏற்படும் பந்தத்தை நீக்குதல் வேண்டும். இந்தச் சரீரம் ஈசனுக்கு ஆட்பட்டது என்று ஈசன் தொண்டை இந்தச் சரீரத்தினால் செய்தல் வேண்டும். இதைச் சரியை அல்லது தாச மார்க்கம் என்று சைவம் சொல்கிறது. அந்த முறைகளைப் பின்பற்றினால் அந்த பந்தம் (தடை) நீங்கும். இம்முறையையும் சைவ சித்தாந்தம் தெள்ளத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றது. அதன் விவரங்களைப் பின்வரும் அத்தியாயங்களில் காணுவோம்.

## இந்திரியங்கள் (புலன், பொறிகள்)

இந்திரியங்கள் ஒருதடை எனக் கருதப்படுகிறது. இந்திரியங்கள் கன்மேந்திரியம், ஞானேந்திரியம் என இருவகைப்படும். இவைகள் நம் எண்ணங்கள் ஈசன்பால் எழவொண்ணாமல் நம்மை உலகத்தின் பால் பற்றுக் கொள்ள இழுக்கின்றன. இவைகள் புலன்கள் என்றும் பொறிகள் என்றும் ஐம் பொறிகள், ஐம்புலன்கள், பஞ்சேந்திரியங்கள் என்று சொல்லப்படுகிறது.

ஞானேந்திரியம் என்பது அக்கருவிகள் மூலம் உயிர் எதையும் தெரிந்து கொள்ள முடிகிறது.

1. செவி
2. மெய்
3. கண்

4. நாக்கு
5. மூக்கு

ஆக ஐந்து பொறிகள் ஆகிறது. செவி மூலம் கேட்கிறோம், மெய் (உடல்) மூலம் உணர்கிறோம். கண் மூலம் காண்கின்றோம். நாக்கு மூலம் ருசி அறிகின்றோம். மூக்கு மூலம் சுவாசிக்கின்றோம். வாசனைகளையும் அறிகின்றோம். இவைகள் இந்தச் செயல்களை அறிவதால் இவைகளுக்கு ஞானேந்திரியம் என்று பெயர்.

உணர்ந்து நாம் செயல் பட்டு கர்மங்களைச் செய்ய உதவுவது கர்மேந்திரியங்கள். அவை ஐவகைப்படும். அவையாவன:

1. வாக்கு - பேசுவது 2. பாதம் - நடப்பது 3. பாணி - காரியங்கள் செய்வது 4. பாயு 5. உபார்தம்பம் மூலம் மலம் ஜலம் கழிப்பது. இந்த ஐம்புலன்கள் நாம் திருவடி ஞானத்தை அடையப் பெரும் தடையாக உள்ளன. நாம் இந்திரியங்கள் வசம் இழுக்கப் படுவதால், அது நமக்குத் தடையாகிறது: இந்திரியங்கள் நம் வசமாதல் வேண்டும். ஆகவே நம் மகான்கள் இந்த இந்திரியங்கள் (புலன், பொறிகள்) இவைகள் நம்மை ஆட்டுவிப்பது பற்றிப்பல விதங்களில் கூறுகிறார்கள். தாயுமானவர் பல இடங்களில் இந்திரியங்கள்தான் என் வசமாகுதில்லையே என்று கூறுகிறார்.

''ஐம் பூதத்தாலே அலக்கழிந்து'' என்றும் கூறுகிறார், மாணிக்க வாசகப் பெருமான்
''இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்''

என்றும், ஞானசம்பந்தர்

''ஆயமாய காயம் தன்னுள் ஐவர் நின்ற லொட்டார்
மாயமே யென்று அஞ்சுகின்றேன்'' என்றும்
''புலன் ஐந்தும், பொறிகலங்கி, நெறிமயங்கி
அறிவு அழிந்திட்டைம் மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேல் என்று
அருள் செய்வான்'' என்றும்

திருவிசைப்பாவில், ''இவ்வரும் பிறவிப் பௌவ நீர் நீந்தும்
ஏழையேற் கென்னுடன் பிறந்த
ஐவரும் பகையே, யார் துணை'' என்றும்,

அப்பர் பெருமான்

''புள்ளுவர் ஐவர்கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
நெஞ்சில் ஐவர் நினைக்க நினைக்குறூர்'' என்றும்
''மூக்கு வாய் செவி கண் உடலாகிவந்
தாக்கும் ஐவர் தம் ஆப்பை அவிழ்த்தருள்''
''பொறிப்புலன்களைப் போக்கறுத்துள்ளத்தை
நெறிப்படுத்து நினைத்தவர் சிந்தையுள்''

என்று இப்புலன்களை ஐவர் என்று சொல்லி அவைகளால் நமக்கு இருக்கும் தடையைத் தெளிவாகச் சொல்லியுள்ளார்கள். அதை நீக்கினுல் ஏற்படும் நிலையையும் விளக்கியுள்ளார்கள். அதை விளக்கச் சைவ சித்தாந்தம் கிரியைகளைச் செய்து அதன் பந்தத்தை நீக்கி அவைகளை ஈசன் பால் ஈடுபடுத்துதல் வேண்டும் என வழிகாட்டுகிறது; அது கிரியா மார்க்கம் எனப்படும்.

## அந்தக்கரணங்கள் :

நம் அந்தக்கரணங்கள் நாம் திருவடிப் பேற்றை அடையப் பெரும் தடையாக உள்ளன. அந்தக்கரணங்கள் மனம், சித்தம், புத்தி, அகங்காரம் எனப்படும்; மனம் என்பது ஒரு பொருளைக் கொள்ளும்; சித்தம் அதைப்பற்றிச் சிந்திக்கும்; புத்தி நிச்சயிக்கும்; அகங்காரம் செயல் படுத்தும். நம்முடைய மனமே நமக்குத் திருவடி ஞானத்திற்கு ஒரு தடையாக உள்ளது.

பகவான் ராமகிருஷ்ணர் இந்த மனத்தை ஒரு ஈயுடன் ஒப்பிடுகிறூர். ஈயானது ஒரு நிமிடம் நல்ல உணவுகள், இனிப்புப் பலகாரங்கள் மேல் உட்காருகிறது. அடுத்த நிமிடம் சாக்கடை முதலிய அசுத்தமான இடங்களிலும் உட்காருகிறது. அதுபோல இந்த மனமானது ஒரு நிமிடம் நல்ல சிந்தனையில் இருக்கும். மறு நிமிடம் வேறு தீய சிந்தனைகளில் இருக்கும். வள்ளல் பெருமான் மனத்தை ஒரு குரங்குக்குச் ''சமமாகக்'' கூறுகிறூர். மனமெனும் பேய்க்குரங்கே என்கிறூர். அந்த மனம் நம்மை எப்படி ஆட்டிப்படைக்கிறது என்று நமக்குத் தெரியும். குரங்கின் சாதாரண குணமே தெரியும். அது கள்ளைக் குடித்து விட்டு, ஒரு தேளாலும் கடிக்கப்பட்டு, போதாதற்குப் பேய் வசப்பட்டால் அதன் நிலை எப்படியிருக்கும் என்று சற்றே சிந்தித்துப் பாருங்கள். அதுபோல நம் மனமே ஒரு பெரிய பிரச்சனை. இன்னும் அது காமம், ஆசை என்னும் கள்ளைக் குடித்துக் கோபம் (குரோதம்) என்னும் தேளால் கடிபட்டு, தான் என்னும் அகங்காரப் பேய் வசப் பட்டால் அது எப்படியிருக்கும் என்பது தெளிவு. நம்முடைய மகான்

கள் இதன் விளைவுகள். அவைகளை எப்படி வழிக்குக் கொண்டு வருவது என்பது பற்றித் தெளிவாகச் சொல்லுகிறார்கள். தாயுமானவர்,

''மனமான வானரகைம் மாலை ஆகாமல் எனையாள்''

என்று மனமான குரங்கு கையில் கிடைத்த மாலை போல் ஆக்காமல் என்னைக் காப்பாற்று என்கிறார்.

''புத்தியெனும் துத்திப் பொறியரவின் வாய்த்தேறை யொத்துவிடாது''

''ஆங்காரம் எனும் மதயானை வாயில் கரும்பாய் ஏங்காமல்'' என்று என்னை அகங்காரமாகிய மதயானையின் வாயில் கரும்பாக ஆக்காமல் இருக்க வேண்டும் என்கிறார்.

''சித்தமெனும் பௌவத்திரைக் கடலில் வாழ்துரும்பாய்'' என்று சித்தத்தைக் கடல் என்கின்றார். அந்தக் கடலில் என்னைத் துரும்பாய் வாழவிடாதே என்கிறார். இவைகளை எண்ணிப்பார்த்தால் அந்தக்கரணங்கள், பொறிகள், இவைகள் நமக்கு எவ்விதம் தடையாக உள்ளன என்பது தெளிவாகிறது இந்த அந்தக்கரணங்களை நெறிப்படுத்த யோக மார்க்கத்தைச் சைவ சித்தாந்தம் காட்டுகிறது. இவைகளையெல்லாம் ஈசன்பால் ஈடுபடுத்தல் வேண்டும்.

சேரமான் பெருமாள் நாயனார்,

''சிந்தை செய்ய மனம் அமைத்தேன் செப்ப நாவமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத்தேன், கை,தொழ அமைத்தேன்
பந்தனை செய்வதற்கு அன்பமைத்தேன் மெய்அரும்பவைத்தேன்''

என்று நம் கரணங்கள் இறைவன்பால் நம்மை ஈடுபடுத்தப் பழக்கப் படுத்த வேண்டும் என அருள்வார்.

அப்பர் பெருமான்

''தலையே நீவணங்காய்''
''கண்காள் காண்மின்களோ''
''செவிகாள் கேள்மின்களோ''
''மூக்கே நீ முரலாய்''
''வாயே வாழ்த்து கண்டாய்''
''கைகாள் கூப்பித் தொழீர்
''கால்களால் பயனென்''

என்று நம் உறுப்புகள் அத்தனையும் ஈசன்பால் ஈடுபடுத்தும் முறையையும் அவை எதற்காக ஏற்பட்டது என்பதையும் தெளிவாகக் கூறுகிறார். திருமூலர் இந்த உடம்பை முன்னம் ஒரு தடையாக எண்ணினேன். உடம்பில் உள்ள பொருள் கண்ட பிறகு அந்த உடம்பை நான் ஓம்புகிறேன் என்று

''உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே, உத்தமன் கோவில் கொண்டான் என்று
உடம்பினை யான்இருந் தோம்புகின் றேனே''

என்று திருமந்திரத்தில் அருளுகிறார். அப்பர் பெருமான்

''காயமே கோயிலாக கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்ற இக்காட்டி னோமே''

என்றும்

''உடம்பெனும் மனைபகத்து உள்ளமே தகளியாக
மடம்படும் உணர் நெய்யட்டி உயிரெனும் திரிமயக்கி
இடம்படும் ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பர் காளை தாதை கழலடி காண லாமே''

என்றும் அருளுகிறார்.




## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

### மாலைக்கண் நோய்க்கு

(அ) தினசரி முருங்கைக் கீரையை சிறிது நாள் தொடர்ந்து உணவில் சேர்த்து வந்தால் மாலைக்கண் நோய் குணமாகும்.

### ஞாபகமறதி வலிப்பு நோய்கட்கு

(ஆ) வல்லாரை இலையை காலையில் தினம் ஒரு பிடி சாப்பிட்டுவர ஞாபகமறதியும் வலிப்புநோயும் குணமாகும். வல்லாரையில் செம்பு சத்துள்ளது. இது மூளைக்குச் சிறந்த டானிக்.

### வயிற்றுக் கடுப்புக்கு

(இ) கடுக்காயை நன்றாக இடித்து இரவு நீரில் ஊற வைத்து காலையில் சிறிது மோருடன் எலுமிச்சம்பழச் சாறுடன் கலந்து சாப்பிட வயிற்றுக் கடுப்பு குணமாகும்.

Dr. N. சடையப்பன். S.M.P.

சிவ சிவ

திருக்கொள்ளம்புதூரில்

# திருநெறிய தேவாரத் திருமுறை இன்னிசை.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21வது அதிபர்

ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம் நடத்தப் பெறுவது.

துன்மதியாண்டு ஐப்பசித்திங்கள் 11உ (27—10—81) மாலை 6மணியளவில்.

திருமுறை வாணர்கள்

1. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
   திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி, சகோதரர்கள்.
   திருவாவடுதுறை
2. தேவார இசைமணி
   திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்.
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி.
3. இசைநம்பி திரு. S. கல்யாண சுந்தர ஓதுவார்.
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், கும்பகோணம்.
4. திரு. சொ. செல்வக் கணபதி ஓதுவார்
   திருக்கொள்ளம்புதூர்.
5. திரு. S. L. சாமி - பிடில், தஞ்சாவூர்.
6. திரு. கோ. வேங்கடராமன் மிருதங்கம், திருப்பனந்தாள்.
7. திரு. S. A. கோபால் வேய்ங்குழல், சிதம்பரம்.

அருளாணையின் வண்ணம்
முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர்.

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள் }

உ

சிவ சிவ

தஞ்சாவூரில்

## சிவபாத சேகரன் இராசராசசோழன் நினைவு

# இன்னிசைத் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

துன்மதி ஆண்டு ஐப்பசித் திங்கள் 22ஆம் நாள்

7—11—81 ஐப்பசிச் சதயம் — சனிக்கிழமை

தஞ்சாவூரில் தஞ்சைப் பெருவுடையார் சந்நிதியில் இரவு 9—மணிக்குத் தொடங்கிப் பிரகதீஸ்வரர் வலம்வரும் திருவீதிகளில் இரவு முழுவதும் இன்னிசைத் திருமுறைபாடி காலை6 மணிக்குத் தஞ்சைப் பெருவுடையார் சந்நிதியில் நிறைவு செய்யப்பெறும்.

திருமுறை வாணர்கள்:

1. சங்கீத பூஷணம், கலைமாமணி
   தருமபுரம் திரு. P. சுவாமிநாத முதலியார், சென்னை.
2. இசை நம்பி திரு. S. கல்யாணசுந்தர தேசிகர்,
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், கும்பகோணம்.
3. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
   திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்.
4. தேவார இசைமணி
   திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
   ஸ்ரீகாசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி.
5. திரு. P. இராமச்சந்திர ஓதுவார், விருத்தாசலம்.
6. திரு. தி. சா. தண்டபாணி தேசிகர், திருபுவனம்.
7. திரு. S. L. சாமி – பிடில், தஞ்சாவூர்.
8. திரு. கோ. வேங்கடராமன், மிருதங்கம், திருப்பனந்தாள்
9. திரு. S. A. கோபால், வேய்ங்குழல், சிதம்பரம்.

அருளாணையின் வண்ணம்

ஸ்ரீகாசிமடம்
திருப்பனந்தாள்

முத்து. மெய்கண்டதேவன்
மானேசர்.

# நெஞ்சு விடுதூது

தெளிவுரை

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

—அலகிறந்த
80. காட்சியான் காட்சிக்கும் காணுன் கலைஞான
ஆட்சியான் ஆட்சிக்கும் ஆயினன் - சூட்சியான்
பாரும் திசையும் படரொளியாலே நிறைந்தான்
தூரும் தலையும்இலாத் தோன்றலான் — வேராகி
வித்தாகி வித்தின் விளைவாகி மேவுதனுச்
சத்தாதி பூதங்கள் தானுகிச் — சுத்த
வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக்கு அப்பால்
உறுபொருளாய் நின்ற ஒருவன் — பொறியிலியேன்
வெம்பும் பிறவியலே வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியென் தம்பிரான் — அம்புவியோர்
85. போற்றும் திருவடியென் புன்தலைமேலே.பொறித்தோன்
ஏற்றின் புறத்தமைந்த எங்கோமான் — சாற்றுவார்
சாற்றும் பொருளான் தனிமுதல்வன் தான்அல்லான்
வேற்றின்பம் இல்லா விளங்கொளியான் — போற்றும்
குருவேட மாகிக் குணம்குறிஒன்று இல்லாப்
பெருவேட மாய்நிறைந்த பெம்மான் — கருவேடம்
கட்டும்உருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையான்
எட்டுமவர்க்கு எட்டா இயல்பினன் — மட்டவிழ்தார்
வானேன் பவனி வரக்கண்டு வல்வினையேன்
ஏனேரும் ஏத்துதல்கண்டு ஏத்தினேன்.

(தெ-ரை) எண்ணிறந்த உயிரினங்களும் தத்தம் தகுதிக்கேற்பக் கண்டு மகிழ்தற்குரியான். தன்முனைப்பால் காணும் காட்சிக்குக் காணப்படாதவன். பற்பல கலையுணர்வுகளையும் தன் ஆளுகைக்கு உட்படுத்தியிருப்பவன். அளவிறந்த உயிரினங்களைத் தன் அடிமையாகவும் அவற்றின் நுகர்பொருளாக அமைவனவற்றைத்தன் உடைமையாகவும் பேணிக்காக்கும் பெற்றியான். அனைத்தையும் இயக்கும் இயல்பினனுகியும் அவற்றில் சிறிதும் தோய்வின்றி இருக்கும் சூழ்ச்சித் திறனுடையான், உலகையும் எண்திசைகளையும் தன் ஒளியாலே நிறைவித்தவன்: முதலும் முடிவும் இல்லாத பெருமையுடையான். இயங்கு பொருள் இயங்காப் பொருள் ஆகிய இரு பொருள்

களுக்கும் வேராகவும், அவை தோன்றுதற்குரிய வித்தாகவும், அவ் விதை வழி உருவாகும் விளைவாகவும், பொருந்தி இருக்கும் உடல் புலன் பூதம் முதலிய பொருள்களாகவும் விளங்குபவன்; அபரவிந்து அபரநாதம் பரவிந்து பரநாதம் ஆகியவற்றைக் கடந்து உயிர்கள் அடைதற்குரிய பொருளாகியும் நிலைபெற்றிருப்பவன். நல்வினையில் லாத யான் கொடுமைமிக்க பிறவிக் கடலில் வீழ்ந்து விடாமல் வீடு பேற்றை வழங்கியருளிய சம்பந்த மாமுனி என்னும் பெயருடை யான் எம்தலைவன். உலகினர் போற்றி ஏத்தும் தனது திருவடிகளை எனது இழிந்த தலைமேல் நீங்காவாறு பதித்திருப்பவன். ஆனேற்றின் மீது அமர்ந்திருக்கும் எமது தலைவன். நூலறிவும் நுண்ணறிவும் உடை யோர் திருவருள் வயத்தால் தத்தமக்கு ஏற்றவாறு சொல்லிச் சுவைக்கும் பொருளாக விளங்குபவன். ஒப்பற்ற முதல்வன். திரு வருள் உணர்வுடையார்க்குத் தானன்றி வேறு இன்ப இலக்கு இல் லாதவாறு விளங்கும் பேரொளியான். போற்றுதற்குரிய குருவடிவு கொண்டு உயிர்களை ஆட்கொள்ளும் தகைமையனுயினும் ஏனைய உயிரினங்களுக்குரிய குணங்களோ அடையாளங்களோ முதலிய எவையும் இல்லாத அருளுருவம் கொண்டு யாண்டும் நிறைந்திருக்கும் தலைவன். உயிரினங்கள் தத்தம் இயல்பிற்கேற்பக் கருக்கொண்டு உருவாதும் பிறவிக் கட்டினை அறுத்தவன். மெய்ந்நூற்பொருளை நன்குணர்ந்தவர்கள் வாழும் தில்லைப் பதியைத் தன் இருக்கையாகக் கொண்டவன். தன்முனைப்பாலும் வெறும் நூலறிவாலும் காண முற்படுவார்க்கு அறிய இயலாத இயல்பினை உடையான். தேனெழு கும் கொன்றை மாலை அணிந்து மேலோங்க விளங்குபவன். அத்த கையோன் உலாப்போதர மெய்யுணர்வுடையார் பலரும் அப்பெரு வருகையைக் கண்டு வழிபட, வல்வினை உடையனுகிய யானும் போற்றி வழிபடலாயினேன்.

இறைவன் அருள்வழி நின்று காண்பார்க்குக் காண்டற்குரியனு தல் பற்றிக் 'காட்சியான்' என்றார். உயிரினங்கள் ஒருபடித்தான உணர்வுடையன அல்ல. ஆதலின் அவற்றால் காணப்படும் காட்சியும் ஒரு தன்மைத்தாய் இருப்பதற்கு இல்லை. ஆதலின் 'அல்கிறந்த காட்சி யான்' என்றார். எதுகை நோக்கி ளகரம் லகரமாயிற்று. சூழ்ச்சி-ஈண்டு அளவிறந்த ஆற்றலைக் குறித்தது. தூரு—அடி. தலை—முடி. சுத்தம்— அபரவிந்து. சதாசிவம் முதலிய மூர்த்திகளுக்கு உடலாகவும், இதுசிவசத்திகள் தோய்தற்குரிய இடமாகவும் விளங்குதலின் இதனைச் 'சுத்தம்' என்றார். வெறு வெளி — அபர நாதம்: அருவாகவும் தன்பால் யாதும் தோன்றுதற்கு இலதாகவும் விளங்குதல் பற்றி 'வெறு வெளி' என்றார். பாழாய்—பரவிந்துவாய்:

தன்பால் பொருந்திய உயிர்களுக்கு ஆற்றலும் செயலும் இல்லாமல் இருத்தலின் 'பாழாய்' என்றார். வெறும் பாழ்-பரநாதம். இவ்விடத்தைப் பற்றிய உயிர்கள் உயிர் என்பதொரு முதலும் அற்று பற்றப்படும் பொருளேயாக விளங்குதலின் 'வெறும்பாழ்' என்றார். பொறி-ஊழ்: ஈண்டு நல்வினையைக் குறித்தது அஃது அப்பொருளாதல் 'பொறியின்மை யார்க்கும் பழியன்று' என்பதனானும் அறிக. தமதுகுரு முதல்வர் மறைஞானசம்பந்தராதலின் 'வீடளித்த சம்பந்த மாமுனி' என்றார். அக் குரு முதல்வர் இறைவனே ஆதல் பற்றி 'ஏற்றின் புறத்தமைந்த எங்கோமான்' என்றார். ஏறு—ஆன் ஏறு. 'ஆனேறு ஊர்ந்தோன் அருளினின் தோன்றிய' என்பர் இளங்கோவடிகளும். சாற்றுதல் — சொல்லுதல். உயிர்கட்கு இன்பினைத் தருதற்குத் தானன்றி வேறு யாரும் இல்லையாதலால் 'வேற்றின்பம் இல்லா விளங்கொளியான்' என்றார். குணம்—உயிர்கட்கு உற்ற சாத்துவிகம் முதலாயின. குறி—உயிரினங்கட்குற்ற வடிவு. உயிரினங்கள் பலவற்றிற்கும் உரிய குணங்களும் வடிவும் அவனுக்கு இல்லையென்பார் இவ்வாறு கூறினர். பெருவேடம்—அம்மையப்பராய் விளங்கும். வடிவம் 'பாகத்து அருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப், பெரு வடிவை யாரறிவார் பேசு' என வரும் திருவாக்கும் காண்க. உயிரினங்கள் நால்வகையாய்த் தோற்றம் உடையன. அவை கிழங்கு, வியர்வை, முட்டை, கரு என்பன. இவ்வாறு தோன்றியகரு தத்தமக்கேற்ற வடிவு கொள்ளுதலின் 'கரு வேடங் கட்டும் உரு' என்றார். கற்றவர்-கல்விப் பயனாகிய மெய்யுணர்வுடையோர். 'கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராமே, செற்றார் வாழ்தில்லை' என்னும் திருமுறையும். எட்டுமவர் — தன்முனைப்பானும் நூலறிவானும் இறைவனைக் காண விழைவோர். 'தன்னறிவதனால் காணும் தன்மையன் அல்லன் ஈசன்', 'நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக', 'வெல்லாமல் எவரையும் வெருட்டிவிட வகைதந்த வித்தை என் முத்தி தருமோ' எனவரும் திருவாக்குகளும் காண்க. மட்டு-தேன், தார்—மாலை: கொன்றை மாலை. வானோன்—மேலோன்.

90 தான் என்னைப்
பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லாம்
நீத்தான் நினைவுவே றாக்கினான் — ஏத்தரிய
தொண்ணூற்று அறுவர்பயில் தொக்கில் துவக்குஅறுத்தான்
கண்ணூறு தேன்அமுதம் காட்டினான் — வெண்ணீறும்
வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மாடையும் வாழ்க்கை மனையுமே — நாடரிய

அஞ்செழுத்தின் உள்ளீடு அறிவித்தான் அஞ்செழுத்தை
நெஞ்சமுத்தி நேய மயலாக்கி — அஞ்செழுத்தை
உச்சரிக்குங் கேண்மை யுணர்த்திஅதன் உச்சரிப்பு
வைச்சிருக்கும் அந்த வழியாக்கி — அச்சமறச்
சென்று விளக்கை எழத்தூண்டிச் செஞ்சுடரின்
ஒன்றி ஒருவிளக்கின் உள்ளொளியாய் — நின்ற
பெருவிளக்கின் பேரொளியாய் உள்ளே பிரசம்
மருவும் மலர்போல் மதித்துஅங்கு — கருவினுருக்
கொள்ளா அருளைக் கொளுத்திக் குணங்குறியொன்று
இல்லா இடத்தே இளைப்பாற்றி — விள்ளாத
உள்ளம் முதலாக உள்ளதெலாம் வாங்கஅருள்
வெள்ள மயலளித்து மேவினுன் — கள்ளம்
மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கிமன மெல்லாம்
இறப்பித்தான் என்பிறவி யீர்த்தான் — விறற்சொல்லுக்கு
எட்டானை யார்க்கும் எழுதா இயல்குணங்கள்
எட்டானை ஆற்று எழுத்தினுன்.

(தெ - ரை). மேற்கூறிய சிறப்பமைந்த பெருமான் எளிய என்னைத் தன் திருநோக்கினுல் பழைய வினையையும் ஐம்மலக் கொத்துக்களையும் என்னின் வேருகுமாறு செய்தான். அத்தூய்மையால் முன்னைய உலகியல் நினைவுகள் வேருகுமாறு ஆக்கினுன். சொல்லுதற்கரிய தொண்ணூற்ருறு தத்துவங்களும் பயிலும் உடல் துடக்கினை முழுமையாக அறுத்தான். இவ்வருமைப்பாட்டை நினையுந்தோறும் உளதாகும் கழிமகிழ்வால் கண்களில் பெருகி வரும்படியான இன்பக் கண்ணீரைப் பெருகுமாறு காட்டினுன். திருவெண்ணீறும் திருவேடமும் சிவபூசையுமே நிலையுடையன என்ருன். செல்வமும் உலகியல் வாழ்வும் அவற்றைத் துய்த்தற்குரிய வீடும் நிலையற்றன என்ருன். நூலறிவால் ஆராய்ந்து அறிதற்கரிய திருவைந்தெழுத்தின் உட்பொருளை அறிவித்தான். அத்திருவைந்தெழுத்தை நெஞ்சத்து இருத்தி அதனுல் உளதாகும் அன்பு மயமாக்கி அத்திருவைந்தெழுத்தை நினைந்து இன்புறும் தகைமையையும் உணர்த்தி, அவ்வாறு அதனை நினைவு கொள்ளுமாற்ருன் உயிரது அச்சம் நீங்குமாறும் உள்ளொளி எழுமாறும் தூண்டி, அவ்வொளியொடு ஒன்றி அதன் உள்ளொளியாய் நிற்குமாறு செய்து, அவ்வாறு தன்னை அகப்படுத்தி நிற்கும் பேரொளியாகவே அமைந்து தேனைத் தன்னகத்து அடக்கிய மலரென மதித்து அந் நினைவால் மாயையின் வயப்படாத அருளைப் பெறுமாறு செய்து அந்நிலையில் குணமும் குறியும் அற்றபெருவெளியில் இளைப்பாறுமாறு செய்து, வாய்வீட்டுச் சொல்ல இயலாதவாறு என் உயிர் உடல்

பொருள் ஆகியவற்றையெல்லாம் தன்னுடையனவாக்கி அவ்வாறு அருளிய பேரருள் வெள்ளத்தில் தன்னோடு இயைவித்தான். மலப் பிணிப்பால் உளவாய வஞ்சனைகளை மறக்குமாறு செய்தான். மெய் யுணர்வு பெறுமாறு செய்து, உலகியலுணர்வு கொள்ளும் மனம் முதலிய கருவிகளையெல்லாம் அச்சிந்தனையினின்றும் மாற்றித் தன் அருளுணர்வு கொள்ளுமாறு செய்தான். இவ்வாற்றான் என் பிறவியை வேரறுத்தான். சொல்லில் சொல்லெதிர் கொள்ளாச் சொற்களைக் கொண்டும் அவன் இன்னன் என்று கூறப்படாதவன். யாவரானும் எழுதிக் காட்டுதற்கரிய இயல்பினன். எண் குணங்களை உடையான். யாவரானும் உணர்தற்கரிய ஓம் எனும் எழுத்தினன்.

பார்த்தான்—அவனது அருள் நோக்கம் குறித்தவாறு. பழைய வினை-உயிரால் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் துய்த்தனவும், பிறந்த உடம்பான் முகந்து நின்றனவும் ஒழியப் பின்னும் துய்க்கக் கடவதாகவுள்ள வினை: சஞ்சிதம். பஞ்சமலம்—ஆணவம் கன்மம் மாயை மாயேயம் திரோதாயி என்பன. நினைவு வேருக்கினன் – உலகியல் உணர்வு தூரத் திருவருள் உணர்வு மீதூருமாறு செய்தான். 'செயல் மாண்டவாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ'? என்னும் திருவாக்கும் காண்க. தொண்ணூற்று அறுவர் பயில் தொக்கு—உடல் துவக்கு: துன்பம். துன்பம் நீக்கும் அருமருந்தாய்த் திருநோக்கு இருத்தலின் அதனைக் 'கண்ஊறு தேன்அமுது' என்றார். வேடம்—அடியவரின் திருவேடம் மாடு—செல்வம். திருவைந்தெழுத்தின் உள்ளீடு முப்பொருள் உண்மை அறிதலாம். அதனை மூலாதாரம் முதலாகப் புருவநடு ஈறுகூ உள்ள இடங்களில் உளங்கொள்வதும் அதன்வழிஒளி வடிவாக விளங்கும்சிவ பரம்பொருளை உணர்ந்து தெளிதலும் எழுதிவிளக்கும் தகையதன்று; குருவருள் வழிநின்று உணரத் தக்கதாம். பொருளுண்மை உணர்த்து தலில் சொல் வன்மை உடையனவே. எனினும் மெய்ப்பொருளை உணர்தற்கு அவை தாமே கருவியாகா. அவன் பெருவடிவு கொண்டு ஆட்கொள்ளும் திறம் எண்ணவும் எழுதவும் அரிதாம்: ஆதலின் 'யார்க்கும் எழுதா இயல்' என்றார். எண்குணங்களாவன: தன்வயத் தனுதல், தூயவுடம்பினனுதல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், முடிவில்லாற்றல் உடைமை, வரம்பிலின்பம் உடைமை, இயற்கை உணர்வினனுதல், முற்றும் உணர்தல், பேரருள் உடைமை.

ஆற்ரு எழுத்து - தன் உணர்வினுல் உணர்தற்கரிய எழுத்து: ஓங்காரம்.

உ
சிவ சிவ

# கந்தபுராணப் படனம்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-வது அதிபர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

சிதம்பரம் அருள்மிகு நடராஜர் திருக்கோவிலில் பாண்டிய நாயகத்தில்

துன்மதி ஆண்டு ஐப்பசித்திங்கள் 18 ஆம் தேதி
(3—11—81) சஷ்டித் திருநாள் முதல்

ஓர் ஆண்டுக்காலம் ஒவ்வொரு செவ்வாய், ஞாயிற்றுக்
கிழமைகளிலும் மாலை 6 மணி முதல் 8 மணி வரை

சிதம்பரம் வித்துவான். கா. ம. வேங்கடராமையா
எம். ஏ. அவர்களால்
( விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் )
கந்தபுராணப் படனம் நடத்தப்பெறும்.

தலைநாளன்று (3-11-81)

திரு. ஐ. ஆனந்தநடராஜ தீக்ஷிதர்,
எம். ஏ. பி. ஓ. எல்; டிப். இன். சான்ஸ்க்ரிட்;
அவர்கள் தலைமையில்,

திருக்கோயில் திருப்பணிக் கமிட்டி செயலர்,
சிதம்பரம் திரு. ஜி. வாகீசம் பிள்ளை அவர்கள்
தொடங்கி வைத்து உரையாற்றுவார்கள்.

நமரங்காள் வந்து கேட்டு இன்புறுவீராக.

ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள்.
10-11-81

அருளாணையின் வண்ணம்,
முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர்.

# திருவாக்கு

## 'ஞானம்'

### அங்கம்-1 திருநாவலூரில் நம்பியாரூரர் தேரோட்டி விளையாடுதல்

ஆரூரர்: பரமசிவா – நடராஜா – நமசிவாயா – விநாயகா – செந்தில் – எல்லாரும் வாங்கடா – தேர் ஓடவேண்டாமா–இழுங்கடா – வேகமா இழுங்க. கொஞ்சம் இருடா – சாமி – விழாமெ நான் பிடிச்சிக்கிறேன். இப்ப இழுங்கடா.

பரமசிவன்: ஆரூரா! நீ குருக்களா இரு. தேர் நிக்கற இடத்திலே பூசை பண்ணனும் தெரியுமா?

நடராஜன்: நான் தீவட்டி பிடிக்கிறேன்.

சேந்தில்: நான் மேளம் – விநாயகம் – நாதசுரம் – செந்தில் – ஒத்து

ஆரூரர்: செந்தில் – ஆ – எப்படி நம்ம தேர் – கும்பத்தின் அழகு பார் – கொடிச்சீலே அழகு பார் – உள்ளே சுவாமியின் அழகுதான் என்ன அழகு – உம் இழுங்கள் – இழுங்கள்.

விநாயகம்: சரிடா. தேர் நிக்கிறது – பூசை பண்ணுடா –
''நமசிவாய வாழ்க – நாதன் தாள் வாழ்க –
இமைப் பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க."

பரமசிவன்: சரியான குருக்கள்ளு குருக்கள்டா நீ.

ஆரூரன்: நீங்களும் சொல்லுங்கள் – (எல்லாரும் சொல்லுதல்)
சிவாய நம ஓம் – ஓம் நமசிவாய – சிவாய நம ஓம்.
(தேர் இழுத்தல்–)
(திருமுனைப்பாடி நாட்டு மன்னன் ஆரூரனைக் காணுதல்)

மன்னன்: இந்தக் குழந்தை மிகவும் அழகாக விளையாடுகிறான் – இல்லையா – இவனைப் பார்த்தாலே தெய்வாம்சம் பொருந்தியவனாகக் காணப்படுகிறான் – எனக்கோ குழந்தை இல்லை - இவன் யாருடைய பிள்ளையோ – இவன் எனக்குக் கிடைத்தால் - எனது அபிமான பிள்ளையாக வளர்த்து இந்நாட்டுக்கு இளவரசாக்கலாம் என்று எண்ணுகிறேன்ரு இவன் யாருடைய பிள்ளை என்று விசாரிக்கலாமா.

அமைச்சர்: அழகான குழந்தைதான் – இவன் யாருடைய குழந்தையோ – கொடுப்பார்களோ என்னவோ – பார்த்தால் அந்தணக் குழந்தையாகக் காணப்படுகிறுன் . விசாரித்துச் சொல்லுகிறேன் மன்னவா

மன்னர்; தம்பி - உன் பெயர் என்ன - உன்பெற்ருேர்கள் யாவர்?

நமசிவாயம்: அரசே எனக்குத் தெரியும் - நான் சொல்றேன் – இவன் பேரு - ஆரூரன் - இவன் அப்பா சடையனுர் - அம்மா பேரு இசைஞானியார் - இவன் எங்க வீட்டுப் பக்கத்து வீட்டுப் பையன் தான்.

மன்னன்: அமைச்சரே- இவன் சொல்வதுசரியானுல்-இந்தக்குழந்தையையும், இவனது பெற்ருேரையும், நாளை நமது சமுகத்துக்கு அழைத்து வருக.

அமைச்சர்: அப்படியே அரசே. (அரசர் திரும்பிச் செல்லுதல்)

நடராஜன்: ஏ - இவனுக்கு அடிக்குதுடா யோகம் - இவன் ராஜா மவன் ஆகப் போரான் - ஆரூரா எங்களை மறக்காதேடா.

செந்தில்: நீ ராஜாவானு நான்தான் முதல் மந்திரி - என்ன, சரி தானு.

ஆரூரன்: எல்லாம் இறைவன் திருவருள் – இதுவும் அவர் திருவிளையாடலோ!

விநாயகம்: விளையாட்டு இல்லெடா - நெஜம்மா - மகாராஜாதான் உன்னைப்பார்த்து ரொம்ப ஆசைப்பட்டார். உன்னைத் தான் தாம் புள்ளையா எடுத்துக்கிறதா சொல்லிட்டாரே அப்பரம் என்னடா? நீ அரண்மனைக்குப் போனு எங்களை எல்லாம் மறந்துடுவாயாடா.

ஆரூரன்: ஊம் - ஹூம் - மறக்கவே மாட்டேன்.

(வளரும்)

அதற்குச் சித்தர், ''உங்கள் அமுதம்போன்ற தலைவியை இங்கே அழை யுங்கள்'' என்றார். அந்த ஏவல் மகளிர் தங்கள் தலைவியிடம் சென்று, ''அம்மையே! சிவனடியார்களனைவரும் திருவமுது செய்து சென்றனர்; ஓர் அடியார் சித்தமூர்த்தியாய்ப் புன்முறுவலுடையவராய் இவ்வுலகில் கிடைத்தற்கரியவராய் இன்னும் அமுது செய்யாது இருக்கின்றார்'' என்று தெரிவிக்க, உடனே பொன்னனையாள் அணிகலன்கள் மலர்ந்த பூங்கொம்பர்போல நடந்து சித்தமூர்த்தியின் திருமுன் சென்று, ''தேவரீர் வரவு நல்வரவாகுக'' என்று கூறிச் சித்தமூர்த்திகளுக்கு அருக்கியமும் ஆசனமும் கொடுத்துத் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து, சித்தமூர்த்திகளின் திருமேனியினது அழகின் செல்வத்தைக்கண்டு புன்னகை தோன்ற நின்று, ''தேவரீர் இங்கு எழுந்தருளுவதற்கு என்ன தவம் செய்தேனோ'' என்று கூறிச் சிரசின்மீது கைகூப்பித் தொழுதாள். சித்தமூர்த்திகள் அன்புடன் பொன்னனையாள்மீது [1] திருநோக்கம் வைத்தருளினர். பொன்னனையாள், பக்தி வலையிற்பட்ட பரமனது திருவருளாய வலையில் அகப்பட்டனள்.

### சித்தமூர்த்தி பொன்னனையாளை மெலிந்த காரணம் யாதெனல்

பொன்னனையாள் சித்தமூர்த்திகளை நோக்கி, ''எம்பெருமானே! உள்ளே எழுந்தருள்க; தேவரீர் திருவுள்ளத்திற்கு ஏற்றவாறு தொண்டினைச் செய்ய வல்லேன்'' என்று கூறி வணங்கினாள். சோமசுந்தரக் கடவுளாகிய சித்தமூர்த்திகள் உள்ளே நகைத்துப் பொன்னனையாளை நோக்கி, ''மாவடுவின் பிளவினையொத்த விழிகளையுடையாய்! பேரழகுடைய நீ உனது கொடிபோன்ற இடையினைப்போல் சிறிது உடல் மெலிந்திருக்கின்றாய்; அதன் காரணம் யாது?'' என்று வினவினார்; அதற்குப் பொன்னனையாள் சித்தமூர்த்திகளின் திருவடிகளை வணங்கி, ''எம்பெருமானே! அடியேற்கு வேறு ஒரு மெலிவும் இல்லை; எங்கள் தலைவராகிய சிவபெருமானின் திருவுருவத்தினை ஆக்குவதற்குப் பெருவிருப்பங்கொண்டு, மெழுகினால் கருக்கட்டி வைத்தேன்; அதனைப் பொன்னினால் செய்துமுடிக்கக் கருதிய அடியாளுக்கு நாடோறும் கையில் வரும் பொருள் முழுவதும் மகேசுர பூசைக்கே செல்கின்றன; சிறிதும் எஞ்சுகின்றதில்லை'' என்றாள்.

---

1. இங்குத் திருநோக்கம் 'சட்சு தீட்சை' ஆகும்.

சிந்தமுர்த்திகள் சிவனடியார் பெருமையினைக் கூறல்

பொன்னனையாள் கூறிய இன்சொல்லாகிய தேனைச் சித்தமூர்த்திகள் தமது திருச்செவி வாய் மடுத்து, ''பெண்ணே! நீ யாக்கையும் இளமையும் செல்வமும் நீர்க்குமிழிபோலச் சிறிதும் நிலையில்லாதவை என்று உணர்ந்தாய்; தருமம் ஒன்றே நிலையுடையது என்று துணிந்தாய்; தருமங்களுள் சிவதருமமே (சிவபுண்ணியமே) சிறந்தது என்றும், சிவதருமத்துள் சிவபூசையே சிறந்தது என்றும், சிவ பூசையுள் [1]மகேசுர பூசையே சிறந்தது என்றும் தெளிந்து மகேசுர பூசை செய்கின்றாய்; ஆதலால், நீ இம்மைப் பயனையும், மறுமைப் பயனையும் பெற்றுக் கொண்டாய். பொன்னனையாள் என்னும் உன் பெயருக்கேற்றவாறு அழிவில்லாத இறைவன் திருவுருவைப் பொன்னாற் செய்யப் பெறுவாயாக. அதற்கு உன் மனையிலுள்ள பித்தளைப்பாத்திரம், ஈயப் பாத்திரம் முதலிய எல்லாவற்றையும் இங்கே கொண்டுவருவாய்'' என்று கூறியருளினார்.

சித்தமூர்த்திகள் இரசவாதம் புரிதல்

உடனே பொன்னனையாள் வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், பித்தளை, வெண்கலம், தரா முதலிய உலோகங்களெல்லாவற்றையும் கல்லென்று ஒலிக்கக் கொண்டுபோய்ச் சித்தமூர்த்திகளின் முன்னர் வைத்தனள். அங்ஙனம் கொண்டுவந்து வைத்த வெவ்வேறு வகையான உலோகங்களெல்லாவற்றின் மீதும் சித்தமூர்த்திகள் [2]திருநீற்றினைச் சிதறி, 'இவை யாவும் பொன்னாக' என்று சிந்தித்து, அவளை நோக்கி, ''இவற்றை நீ இன்றிரவு நெருப்பிலிட்டு எடுக்கின் யாவும்

---

1. இங்கு, மகேசுர பூசையாகிய சிவனடியார் பூசையே மிகச் சிறந்தது என்பதனை, ''ஆறிடும் வேள்வி அருமறை நூலவர், கூறிடும் அந்தணர் கோடிபேர் உண்பதில், நீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை, பேறெனில் ஓர்பிடி பேறது வாகுமே'', ''அகர மாயிரம் அந்தணர்க்(கு) ஈயிலென் சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென், பகரு ஞானி பகலூண் பலத்துக்கு நிகரிலை யென்பது நிச்சயந் தானே'', ''படமாடக் கோயிற் பகவற் கொன்(று) ஈயின், நடமாடக் கோயில் நம்பர்க்கங்(கு)ஆகா, நடமாடக் கோயில் நம்பர்க்கொன்(று) ஈயில், படமாடக் கோயிற் பகவற்க தாமே'' என வரும் திருமந்திரச் செய்யுட்களானும் அறியலாம்.

2. இங்கு, 'மருந்து பூசித் திருக்கையினால் தரிசித்தார்' என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணங் கூறும்.

பொன்னாய்விடும்; அப் பொன்னினால் இறைவன் திருமேனியை வார்ப்பிக்கக் கடவாய்'' என்றார். பொன்னனையாள், ''எம்பெருமானே! நீர் இன்றைக்கு இங்கிருந்து இரவிலே திருவமுது செய்து கொண்டு, இக்காரியத்தையும் முடித்துவிட்டுப் பொழுது விடியுமுன் போவீராக" என்று வேண்டினாள். அங்கயற்கண் அம்மையாரைச் சற்றும் பிரியாதவராகிய சோமசுந்தரப்பெருமானார் அதற்கு உடன்படாமல், ''யாம் மதுரையில் வசிக்கும் சித்தர்'' என்று கூறி மறைந்தருளினார்[1].

பொன்னனையாள் உலோகங்களைத் தீயிலிடப் பொன்னாதல்

பொன்னனையாள், இங்குச் சித்தராய் வந்தவர் வெள்ளியம்பலத்திலே திருக்கூத்து ஆடியருளும் சோமசுந்தரக்கடவுளே என்று உணர்ந்தாள்; சித்தமூர்த்திகள் மறைந்து போயினாரே என்று சிறிது மனஞ்சோர்ந்தாள்; ஆனால் அவர் தன் மனத்தில் நிறைந்துள்ளதாகிய ஒரு பெரிய கவலையை நீக்கினார் என்று சிறந்ததாகிய ஒரு பெரிய மகிழ்ச்சியும் அடைந்தாள்; பிறகு சித்தமூர்த்திகள் கட்டளையிட்டவண்ணமே உலோகங்களனைத்தையும் அன்றிரவு தீயிற் புடமிட்டாள். ஆணவமல வலிகெட்டு இறைவனின் திருவடி நீழல் அடைந்தவர் சிவமாக விளங்குதல் போல உலோகங்கள் நெருப்பினைச் சேர்ந்தவுடன், களிம்பு நீங்கப் பொன்னாக மாறின.

பொன்னனையாள் பொன்னால் இறைவனை வார்ப்பித்தல்

பொன்னனையாள் அப் பொன்னினைக்கொண்டு, ஒரு வடிவமுமில்லாத [2]இறைவனுக்கு ஒரு திருவுரு வார்ப்பித்தாள்; பொன்னினால் செய்யப்பெற்ற சிவபெருமானின் திருவுருவத்தின் பேரழகினைக் கண்டு ''அச்சோ! அழகிய பிரானோ (சுந்தரநாதனோ) இவன்'' என்று சொல்லிக் கன்னத்தில் அள்ளி முத்தமிட்டாள்; தனது மெய்யன்பினால் இடைவிடாதிருந்த பெருமானின் திருவுருவத்தைப் பிரதிட்டை செய்வித்துத் திருவிழாவும் தேரும் நடாத்திச் சில நாள் சென்றபின் [3]வீடுபேற்றினை அடைந்தாள்.

---

1. இங்கு, ''பூவண மதனிற் பொலிந்திருந் தருளித், தூவண மேனிகாட்டிய தொன்மையும்'' (திருவாசகம் கீர்த்தித் திருவகவல்) என வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

2. இங்கு இறைவன் ''சோமாஸ்கந்த மூர்த்தி'' ஆவர்.

3. இங்கு வீடுபேறு என்றது பராசத்தியின் சாரூப பதவியைக் குறிக்கும்.

இறைவன் குறியும் பெயருங்கொண்டு விளங்குதல்

பொன்னனையாள் அப்பெருமானின் கன்னத்தின்கண் அள்ளுதற்கிட்ட கையிலுள்ள நகக் குறியையும், 'அழகிய பிரானே' (ஏமநாதர், சுந்தரநாதர், திருப்பூவணநாதர்) என்று கூறிய காரணப்பெயரையும் இறைவன் கொண்டு கலியுகத்திலே பொன்னுலாகிய திருமேனி வேறுபட்டுத் தக்க உருவாக எழுந்தருளி இன்பம் நல்கி வருகின்றார்.

செய்யுள்—30
ஆகச் செய்யுள்—1885

—oo—

## 37. சோழனை மடுவில் வீட்டிய படலம்

சுந்தரேச பாதசேகரன் தன்மை

இராசேந்திர பாண்டியன் இந்திரன் முதலிய பல பெரிய தேவர்களும் புகழச்சிவலோகத்தை அடைந்தான். பின்பு, அவன் குமாரன் இராசேச பாண்டியனும், அவன் குமாரன் [1] இராசகம்பீர பாண்டியனும், அவன் குமாரன் [2]பாண்டி வங்கிய தீபனும், அவன் குமாரன் [3]புரந்தரசித்தும் அவன் குமாரன் [4]பாண்டிவங்கிய பதாகனும், அவன் குமாரன் சுந்தரேச பாதசேகரனும் ஒருவர் பின் ஒருவராகப் பாண்டிநாட்டை அரசு புரிந்தனர்.

இவர்களில் சுந்தரேசபாதசேகரன் என்னும் பாண்டியன் நான்மாடக் கூடலின்கண் எழுந்தருளியுள்ள சோமசுந்தரக்கடவுளுக்கு மெய்யன்பனாகி, வேற்படையால் குறுநில மன்னர் என்னும் களைகளைப்போக்கி, உலகிலுள்ள உயிர்கள் என்னும் சிறந்த பயிரைச் செவ்வனே வளர்த்து வந்தான். அவன் தன் படையைப் பத்துத்தேரும், நூறு யானையும்,

---

1. இராச கம்பீர பாண்டியன்-இவன் ஆட்சி புரிகையில் தன்னாட்சிக்குட்பட்ட இடங்களிலுள்ள வீடுகள்தோறும் சிவபூசை செய்வித்தவன்; பெரிய சிவ பத்தன்.

2. பாண்டி வங்கிய தீபன் – இவன் பாண்டி நாட்டை நெடுங்காலம் ஆட்சிபுரிந்து சிவபதம் அடைந்தவன். (வங்கியம் – வமிசம்).

3. புரந்தர சித்து-இப்பாண்டியன் இந்திரனைவென்று இப்பெயர் பெற்றவன்.

4. பாண்டி வங்கிய பதாகன்-இவன் தன்னாட்சியில் யாவரையும் சிவபத்தியுடையவராகச் செய்தவன்.

ஆயிரங் குதிரையும், பதினுயிரங்காலாளுமாகிய இவ்வளவே வைத்துக் கொண்டு, இத்துணைச் சேனைக்கு மட்டும் பொருந்திய பொருளைக் கொடுத்து எஞ்சிய பொருள் முழுதையும் அறிவே வடிவமாக மதுரையில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளுக்கே செலவிட்டு வந்தான். சிவபெருமானுக்கு முடி, கண்டிகை முதலாகிய இரத்தினுபரணங்களைச் செய்வித்தான்; வானளாவும் திருக்கோபுரம், திருமாளிகை முதலியவற்றைக் கட்டி ஒளிவிடும்படி பன்மணிகளால் இழைப்பித்தான்; இன்னும் இவைபோன்ற பிற திருப்பணிகளையும் செய்வித்தான்.

**ஆயிரம்பரிக்கோர் சேகவன் என்ற சோழன் படையெடுத்தல்**

சுந்தரேசபாதசேகர பாண்டியனுடைய சேனையின் சிறுமையைக் கருதிய ஆயிரம் பரிக்கோர் சேகவன் என்னும் சோழ மன்னன் ஒருவன் தானே வெற்றி கொள்ளத் துணிந்து வஞ்சி மாலை சூடிப் பாண்டியனோடு போருக்குப் புறப்பட்டு வந்தான். கடலானது சீறிச் செல்வது போலப் பல்வகைப் படைக்கலங்களை ஏந்திய சோழனுடைய சேனைகள் பாண்டி நாட்டை நோக்கி முன்னேறி வருதலை மீனவன் தன் ஒற்றரால் அறிந்து விரைந்தெழுந்து இறைவன் திருமுன் வணங்கி நின்று, ''பொன்னனைய செஞ்சடைப் புனிதனே! உமது திருவருள் வலிமையினுல் இப் பூமியை அரசாளும் அடியேனுடைய வலிமையை நோக்காது என் சேனையின் சிறுமையைமட்டும் நோக்கிச் சோழன் தன்னுடைய சேனையின் வலியினுல் எனது நாட்டைக் கைப்பற்றிக்கொள்ள எண்ணினுன் போலும். சோழன் அளவில்லாத சேனையோடு வடவைத் தீப்போலச் சினந்து வந்தனன்'' என்று விண்ணப்பஞ் செய்தான். அப்பொழுது சிவபெருமான் திருவருளினுலே ஆகாயத்தினின்றும், ''பாண்டியனே! நீயே வாகை மாலை சூடுமாறு நாம் வந்து போர் செய்வோம்'' என்று ஒரசரீரி வாக்குத் தோன்றிற்று. அம் மொழிகளைக் கேட்ட பாண்டியனுடைய முகம் சூரியனைக்கண்ட தாமரை மலரின் பொலிவைப்போல மலர்ச்சியடைந்தது. பாண்டியன் சோமசுந்தரக் கடவுளுடைய திருவடிகளை உள்ளத்தில் கொண்டு வெளியே வந்தான்; பின்னர் பல வாத்தியங்களும் ஒலிக்க, ஒரு குதிரைமீதேறிச் சேனைகள் சூழக் கொல்லிமலையையுடைய சோழனது சேனைக்கடலின் எதிரே சென்றுன்.

**சோழ வீரர்களுக்கு வழுதியின் படை மிகுந்து தோன்றுதல்**

சோழனுடைய பெரிய சேனைக் கடலுக்கு நேரே ஓர் ஆறு செல்லுதல்போலச் சென்ற பாண்டியனுடைய சிறிய சேனை, சோழனுடைய

போர் வீரர்கள் எல்லார்க்கும் சோமசுந்தரக் கடவுளின் திருவருளினாலே ஒரு பெருங்கடல் போலத் தோன்றிற்று.

### இறைவன் வேட்டுவ வடிவுடன் வழுதி படைமுன் நிற்றல்

மேருமலையாகிய வில்லை வளைத்து, வாசுகியாகிய நாணை ஏற்றித் திருமாலாகிய அம்பைப் பூட்டி நகையாலாகிய நெருப்பினால் முப்புரத்தை எரித்து வெற்றிகொண்ட கூடல் தலைவனாகிய சோமசுந்தரக்கடவுள், வேட்டுவத் திருவுருவந்தாங்கிக் கடலின் அலைபோல விரைந்து செல்லும் குதிரை மீதூர்ந்து பாண்டியனது சேனையின் முன்னணியில் சென்று நின்றருளினார். அப்போது இருளில் ஒளி வீசும் சந்திரனைப்போல் விளங்கும் காதின்கண் அணிந்த தந்தத் தாலாகிய தோடும், இரவில் தோன்றிய விண்மீனைப்போல ஒளிவீசும் முத்துமாலையும், வானவில் போலச்சிகையில் அணிந்த வெட்சி மாலையுடன் மயிர்ப்பீலியாலாகிய நுதலணிமாலையும், இருளினைப் போக்கும் தந்தக்காப்பும் ஒளி வீசிநின்றன. தேவர்கள் பொருட்டு நஞ்சுண்ட அந்நாள் முதல் திருமிடற்றிலே தோன்றிய கருநிறம் உடல் முழுவதும் பரந்தாற் போன்று கரிய திருமேனிகொண்டு வேற்படையினை ஏந்திக் காவிரி நாடனுக்கு உற்ற கூற்றுவனைப் போல அவன்காண நின்றருளினார்.

### சோழன் புறங்கொடுத்து ஓடுதலும் இறைவன் மறைதலும்

அதனைக்கண்ட சோழன் சினந்து, ''ஆயிரங் குதிரைகட்கு ஒரு வீரனாகிய யான் வந்தேன்'' என்று சொல்லிக்கொண்டு போய் எதிர்த்தான். வேட வடிவங்கொண்ட சிவபெருமான், ''ஆயிரங் குதிரைகட்கு மட்டும் ஒரு சேவகன் நீ அன்றோ? எண்ணில் முடிவுபெறாத குதிரைகளுக்கும் ஒற்றைச் சேவகன் யானே'' என்றார். அச் சொற்கள் இடியேற்றின் ஒலியினைப்போல இரு காதுகளையும் துளைக்கக் கேட்டு நின்ற சோழன் எதிரே, மின்னல் வீசும் முகிலைப்போலச் சிவபெருமான் விரைந்து சென்று வேற்படையை வலமாகச் சுழற்றிச் சினந்து முழங்கிச் சீற, ஆயிரங் குதிரைகட்கு ஒரு சேவகனாகிய சோழன் பயந்து, ''இனி யாம் இந்த வேற்படையால் இறப்பதற்கு ஐயமில்லை'' என்று நினைந்து குதிரையோடு புறங்கொடுத்து ஓடினான். உடனே வேட வடிவம் தரித்துவந்த சிவபெருமான் மறைந்தருளினார்[1].

---

1. இங்கு, ''வேடுவனாகி வேண்டுருக் கொண்டு, காடது தன்னிற் கரந்த கள்ளமும்'' (திருவாசகம்) என வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

### சோழன் மீண்டு வந்து பாண்டியனைத் துரத்தல்

அதுகண்ட சுந்தரேச பாதசேகர பாண்டின் புறங் கொடுத்து ஓடுகின்ற சோழனைத் துரத்திச்சென்றான். புறங் காட்டி ஓடிக்கொண்டிருந்த சோழன் சற்றுத் திரும்பிப் பார்த்தான்; அப்போது வேடுவனைக் காணாமையால் துன்பமும் அச்சமும் நீங்கித் திரும்பிவந்த பாண்டியனை மதுரைவரையும் தொடர்ந்து துரத்திக் கொண்டு வந்தான்.

### பாண்டியனும் சோழனும் மடுவில் வீழ்தல்

காற்றொன்றினாலே முடுக்கப் பெற்ற கனல் ஒன்று நடந்தாற் போலச் சோழ மன்னால் துரத்தப்பட்டு ஓடுகின்ற பாண்டியன் தனது மதுரை நகர்க்கண் விரைந்து ஓடுகின்றவன் மதமயக்கமுடைய யானை போல மடுவொன்றிலே விழுந்தான். அவனைத் துரத்திவந்த சோழனும் குதிரையோடு வீழ்ந்தனன். மதுரையின் மேலைத் திசையிலுள்ள [1]மடுவில் வீழ்ந்த இருவரில் பாண்டியன் மட்டும் சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைய அதில் தோன்றிய வெள்ளானைபோல அம்மடுவினின்றும் வெளியேறினான்; சோழன் மடுவினில் ஆழ்ந்து இறந்தான்.

### பாண்டியன் இறைவனுக்கு அன்புபூண்டு ஒழுகுதல்

சுந்தரேசபாதசேகர பாண்டியன் பாதலம்வரை ஆழ்ந்துள்ள மடுவில் வீழ்ந்து இறந்த சோழனுடைய ஆடை, அணி, அணிகலப் பெட்டி, காலாள், குதிரை, யானை, தேர் ஆகிய இவற்றையெல்லாம் கைப்பற்றினான்; பிறகு சோமசுந்தரக் கடவுள் அணியத்தக்க ஆடைகளையும் அணிகலன்களையும் தந்து, அவ்விறைவனது திருவருளாகிய கடலுக்குத் தனது அன்பானது நதிபோலப் பெருக வீற்றிருந்தான்.

செய்யுள்— 22

ஆகச் செய்யுள்—1907

——X——

1. இம் மடு, 'கொண்டாழி' எனப்பெயர்பெற்றுள்ளது. "கொண்டாழி என்னும் நாமம் பெற்றது குடபால் ஓடை'' என்பது நம்பி திருவிளையாடல்.

## 38. உலவாக்கோட்டை அருளிய படலம்

### அடியார்க்கு நல்லான் இயல்பு

திருவெண்ணீறு அணிந்த திருமேனியையும் இடபக்கொடியையும் கொண்ட சோமசுந்தரக் கடவுளின் மறை முடிக்கு இணையான புவி முழுதும் நிறைந்த கீர்த்தியையுடைய மதுரைப் பதியிலே வேளாளர் குலத்திலே [1]அடியார்க்கு நல்லான் எனப் பெயர் பெற்ற ஒருவன் இருந்தான். அவன் அறத்திற்கும் அதனுலாகும் புகழுக்கும் நல்லனு யுள்ளவன். அவன் செய்யும் அறத்திற்கு அருள் போன்றவளாகிய கற்பினையுடைய மனைவி தருமசீலை என்பவள். அவள் தன் மரபிற் குரிய ஒழுக்கத்தினின்று சிறிதும் தவருதவள்; தன் கணவனே அன்றிப் பிறரும் நன்கு மதிக்கும் மனையறம் புரியும் தன்மையள்; கணவன் விடுபேறு அடைவதற்கு ஏற்ற தனித்துணை போன்றவள்.

அடியார்க்கு நல்லான் பல ஏர்களைக் கொண்டு உழவுத் தொழில் புரிந்து அதனுல் வரும் ஊதியத்திலே, அரசன் ஆறிலொன்ருகிய தனது கடமையைக் கொள்ள, எஞ்சிய பொருளனைத்தையும் சிவனடி யார்களுக்குத் திருவமுது படைப்பதில் செலவிடுவானுயினன். அள விறந்த அடியார்கள், அடியார்க்கு நல்லான் மெய்யன்போடு அளிக் கும் [2]அறுசுவை பொருந்திய நால்வகை உண்டியைப் போதும் போதும் என்று விருப்புடன் உண்டு செல்வர். மணற்கேணியைத் தோண்டுந் தோறும் ஊற்று நீர் பெருகுதல் போல அடியார்க்கு நல்லானின் செல்வமும் மேன்மேலும் பெருகிற்று.

### அடியார்க்கு நல்லான் வறுமையால் வாடுதல்

அடியார்க்கு நல்லான் தன் பெருஞ்செல்வம் குறைந்தாலும் தன் இனிய பண்பினின்று சிறிதும் குன்றமாட்டான் என்னும் தன்மையைப் பிறர்க்கு உணர்த்தும் பொருட்டுச் சோமசுந்தரக்கடவுள் அவனுடைய நீர் வளமிக்க நிலங்களில் விளைவு குன்றும்படி செய்தருளினுர்;

---

1. அடியார்க்கு நல்லான் - சிவனடியார்களுக்கு இனிய தொண்டு புரிந்து நல்லவனுய் விளங்குபவன்: காரணப் பெயர். அடியார்க்கு நல்லான் என்பது இறைவன் திருப்பெயருமாம். ''கருவூரு ளானிலே, அண்ணலார் அடியார்க்கு நல்லரே'' என்பது திருஞானசம்பந்தர் தேவாரம்.

2. அறுசுவை தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன. நால்வகை உண்டி- உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்பன.